# மங்கை




## தீபாவளிச் சிறப்பிதழில்

☆ ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் ஆசி!

☆ தமிழக அரசின் சமூக நலத்துறை அமைச்சரிடம் ஒரு சிறப்புப் பேட்டி

☆ சிறப்புமிக்க சிறுகதைகள்...

☆ சுவைக் கரும்பான கட்டுரைகள்...

☆ திரும்பத் திரும்ப பார்க்கத் தூண்டும் புகைப்பட அநுபந்தங்கள்...

☆ இசைக்கலைஞர்கள் சந்திப்பு...



---

மற்றும் தொடர்கதைகள், வழக்கமான பகுதிகள், பேட்டிகள்.

**விலை ரூ. 8/-**



TA—F-1



# பறவை வேடர்களின்




முதலில் தெய்வங்களின் தீவின் மர்மத்திற்கான விடை. மிகப்பிடித்தமான மாமா மோசக்காரனுக இருக்க முடியுமா? சாட்சி அவரைத்தான் சுட்டிக் காட்டுகிறது. சரி, துப்பறியும் புலிகளின் அடுத்த துணிகரச் செயல் என்ன? கேளிக்கைப் பூங்காவில், குழந்தைகளின் செல்லப் பறவை பாடுவதை திடீரென நிறுத்தி விட்டது. அதற்கே பிடித்த "ஏக், தோ, தீன், சார்......" கூடப் பாடுவதில்லை. துப்பறியும் புலிகள் ஆராய,...

"பாடும் பறவைக்கு என்ன அழகான, நீல கண்கள்" என்றுள் பூஜா அதன் படத்தைப் பார்த்தவாறு "வாருங்கள் நாம் அதைப் போய்ப் பார்ப்போம்!"

## பாடும் பறவையைக் காணும்

தம் BSA SLR-களில் பாடும் பறவையின் கூண்டை நோக்கி சென்றனர் துப்றியும் புலிகள். "இப்போது பாடுகிறதா பார்ப்போம்" என்றுன் ரால்ஃப் மணியடித்தவாறு. எப்போதும் நிகழ்வது, இப்போது நிகழவில்லை.



"பாடும் பறவையின் கண்கள் பச்சையாக இருக்கின்றனவே!" என்று என்று கெக்கெத் தாள் பூஜா. நிச்சயமாக அது பாடும் பறவை அல்ல. "பாடும் பறவை களவு போய் விட்டது!"



# மர்மம்

## அறிமுகமற்றவனின் பேச்சு

"என்ன நடந்தது?" என்று வினவிய அறிமுகமற்ற மனிதன் ஒருவன், தன் பரிதாபத்தைத் தெரிவித்து, நகர்ந்தான். அடுத்த நாள், துப்பறியும் புலிகள் தம் BSA SLR-களில் கிராமப்புறத்திற்குச் சென்றனர். திடீரென, பூங்காவில் கண்ட மனிதன் அப்பாலிருந்த வீட்டை நோக்கிச் செல்வதை விபுல் தன் பைனகுலரில் கண்டான். மிகவும் பரிச்சயமான 'மெட்டை' யல்லாவா முணுமுணுத்துக் கொண்டிருந்தான்? ஆனால், தான் ஊருக்குப் புதிது, பாடும் பறவையைத் தெரியாது என்றல்லவா சொன்னான்?

## பின்பற்றினர் புலிகள்

பரபரப்படைந்த துப்பறியும் புலிகள் தம் BSA SLR-களில் அவனைப் பின் தொடர்ந்தனர். மெதுவாக 'ப்ரேக்' போட்டு, காத்திருந்தனர். சிறிது நேரத்திற்குப்பின், அவன் வீட்டைப் பூட்டிவிட்டு வெளியேறினான். துப்பறியும் புலிகள் மேலே ஏறினர். உள்ளே அவர்கள் பார்த்தது அவர்களை திடுக்கிடச் செய்தது-அபூர்வமான பறவைகள் கூண்டிலிடப் பட்டிருந்தன. அடைக்கப்பட்ட பறவைகள் விலாச அட்டைகளைக் கொண்டிருந்தன. அப்போது பாடும் பறவையின் குரல் கேட்டது. வியையுயர்ந்த அழகான பாடும் பறவை. "சீக்கிரம், காரியத்தில் இறங்குவோம்"

அந்த அறிமுகமற்றவனை BSA SLR துப்பறியும் புலிகள் ஏன் சந்தேகித்தனர்? அவன்தான் கள்வன்!

இப்போது திருப்திதானே நண்பர்களே? இன்னும் இதுபோல் பல மர்மங்களை நீங்கள் சந்திக்கலாம். அதுவரை உங்கள் BSA-SLR சைக்கிள்களில் தொடர்ந்து முன்னேறுங்கள்.

இப்போது ஒவ்வொரு BSA SLR-உடன் ஒரு டின்டின் ஸ்டிக்கர் மற்றும் ப்ரேக் ஷூ



BSA SLR

Get Set 'n' Go on an adventure

Mudra:M:TI:4467:Tam

# Ekco®

# மார்க்கர்

## "24" கொண்ட பேக்கிலே

இது புதியது! இது நேர்த்தியானது! தெளிவான துடிப்பான வண்ணங்களில்!

இலட்சக்கணக்கான மார்க்கர் செட்டுகள் யு.எஸ்.ஏ. வுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

"12" கொண்ட பேக்கிலும்
கிடைக்கிறது.

Ekco MARKERS
24 FINE LINE WATER COLOUR MARKERS




குழந்தைகளுக்கு ஏற்ற
கச்சிதமான அன்பளிப்பு.



இந்தியாவின் மிகப்பெரிய உற்பத்தியாளர்கள் மற்றும் ஏற்றுமதியாளர்கள்.

ப்ரெசிஷன் ரைட்டிங் பாய்ண்ட்ஸ் பிரைவேட் லிட்., 18 சுபாஷ் ரோட், விலி பார்லே (கி), பம்பாய்-400 057.




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## நம் வாழ்வில் விஞ்ஞானம்

"விஞ்ஞானம் இல்லையேல் எந்த சமுதாயமும் இருக்க முடியாதுதான். விஞ்ஞானம் சில தார்மீகக் கோட்பாடுகளுக்குக் கட்டுப்படுத்தப்பட்டாலே நல்ல எதிர்காலம் ஏற்படும்."

இவ்வாறு நம் முன்நாள் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேரு இலங்கைப் பல்கலைக் கழகத்தில் விஞ்ஞான வளர்ச்சிக் கழகத்தினரிடையே உரையாற்றுகையில் கூறினார். முப்பது ஆண்டுகளுக்கு முன் இப்படிக் கூறியது இன்று எவ்வளவு உண்மை என்பதைக் காண்கிறோம்.

விஞ்ஞானம் வெறும் ஊகத்தால் கூறப்படுவதை ஏற்பது இல்லை என்பது கண்கூடு. எதுவும் சந்தேகத்திற்கு இடமில்லாமல் நிரூபிக்கப்பட்டதையே அது ஏற்கிறது. எதுவும் நன்கு பரீட்சிக்கப்பட்டு அடைந்த முடிவையே அது ஏற்கிறது. எதிர்பார்ப்புகளை ஏற்பதில்லை.

இந்த அடிப்படைக் காரணம்தான் உலகில் விஞ்ஞானத்தையும் தொழில் நுணுக்கத்தையும் விரிவாக்கி புரட்சிகர மாறுதல்களைச் செய்து வருகிறது. வேளாண்மை, தொழில், பாதுகாப்பு, சுகாதாரம் மற்றும் பல துறைகளை நன்கு இயங்கச் செய்ய இந்த விஞ்ஞான வளர்ச்சிதான் பெரிதும் உதவி வருகிறது.

எவ்வளவுதான் விஞ்ஞானம் முன்னேறிய போதிலும் அது மனிதனின் தார்மிக ஆத்மீகப் பிரச்னைகளைத் தீர்த்து வைக்க முடியாமல் உள்ளது. சமுதாயம் இன்னமும் தன் எதிர்காலம் எப்படி இருக்கும் என்பதை காண முடியாமல் தவித்துக் கொண்டுதான் இருக்கிறது. எனவே முடிவான உண்மையைக் காணவே விஞ்ஞானம் துணை வர வேண்டும் என்பதே தற்போதையத் தேவை.

மதிமுகம்: 89 நவம்பர் 1991 புன்னகை: 5

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00



# இளமை துள்ளும் வண்ணங்கள்





பள்ளிக்குச் சென்றால் ஆனந்தம்
புதிய ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ் போஸ்ட்டர்
கலர்கள் இருந்தால் ஆனந்தம்
பேரானந்தம்!
வண்ணமோ வண்ணம்
அழகான வண்ணம்
பச்சைக் கிளிபோல்
பளிச்சிடும் வண்ணம்
கண்ணைப்பறிக்கும் சிகப்பு, நீலம்
பால்போல்
வெண்மை, பனிபோல் மென்மை
இன்னும் என்ன யோசனை?!!
படங்களை உடனே கையில் எடுப்பீர்
புதிய ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ் போஸ்ட்டர் கலர்களை
தீட்டுவீர்! பரவசம் அடைவீர்!



(அம்மாவைக் கண்டு மிரளாதீர் கைவண்ணம் பார்ப்பார்,
விலையைக் கேட்பார் அசந்தே போவார்!)

## இலவசம்



பெயின்ட்-எ-போஸ்ட்டர்
இம்முகவரிக்கு எழுதிப் பெறவும் :
ஃபெவிக்ரில், போஸ்ட் பாக்ஸ் 17437,
அந்தேரி (கிழக்கு), பம்பாய்-400 069.

பிடிலைட்

புதிய
## ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ்
போஸ்ட்டர் கலர்கள்






everest/91/PIL/117 tm

பெயர் ______ வயது ______
முகவரி ______
______
பள்ளிக்கூடம் ______

CDM

# உலக அமைதிக்கான முயற்சி





போட்டி போட்டுக்கொண்டு ஈடு இணையற்ற அணு ஆயுதங்களைத் தயாரித்து வந்த இரு வல்லரசுகளான அமெரிக்காவும் ரஷ்யாவும் தம் ஆயுதங்களைக் குறைத்துக்கொள்ள முடிவு செய்துள்ளன. இரு நாடுகளும் ஜூலை 31ந்தேதி மாஸ்கோவில் கூடி ஆயுதக் குறைப்பு உடன்படிக்கையில் கையொப்பம் இட்டன. வரலாற்றுச் சிறப்புமிக்க இந்த நிகழ்ச்சி மற்றொரு உலகப் போரைத் தடுக்க வல்லது எனக் கருதப்படுகிறது.

அமெரிக்க அதிபர் ஜார்ஜ் புஷ்ஷும் சோவியத் அதிபர் கோர்பச்சேவும் சந்திப்பது இது முதல் தடவை அல்ல. இம்முறை அவர்கள் மாஸ்கோவில் சந்தித்த போது கடந்த ஐம்பது ஆண்டுகளாக இரு நாடுகளும் ஒன்றை மற்றது நம்பாமல் ஆயுதங்களைப் போட்டிப் போட்டுக் கொண்டு சேகரித்து வந்ததற்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்கப்பட்டது.

இந்த இரு வல்லரசுகளின் ஆயுத சேகரிப்புப் போட்டியால் மற்றொரு உலகப் போர் மூள வாய்ப்பு ஏற்படும் எனக் கண்டு உலகின் பல நாடுகளும், ஐக்கிய நாடுகள் சபையும் இந்தப் போட்டியை உடனடியாக நிறுத்தி ஆயுதக் குறைப்பு செய்து கொள்ள வேண்டும் எனக் கோரி வந்தன. இதன் பயனாக 50 சதம் ஆயுதங்களைக் குறைத்துக் கொள்ள இந்த இரு வல்லரசுகளும் 1982ல் பேச்சு வார்த்தை

களைத் துவக்கின.

ஒன்பது ஆண்டுகள் பேசியபின் இந்த ஆயுதக் குறைப்பு உடன்படிக்கையை இரு வல்லரசுகளும் செய்து கொண்டன. இதன்படி ரஷ்யா 35 சத வீத ஆயுதங்கள் அதாவது 90 லட்சம் அணு ஆயுதங்களையும் அமெரிக்கா 25 சதவீதம் அதாவது 75 லட்சம் அணு ஆயுதங்களையும் குறைத்துக் கொள்ளச் சம்மதித்தன.

எந்த ஒரு நாட்டிடமும் 4 லட்சம் அணு ஆயுதங்கள் இருந்தாலே அது இன்னொரு நாட்டைத் தாக்கிப் பெருத்த சேதம் விளைவிக்க முடியும் என இராணுவ நிபுணர்கள் கருதுகிறார்கள். இந்த உடன்படிக்கையால் ஒவ்வொரு நாட்டிலும் ஒரு லட்சம் அணு ஆயுதங்கள் குறையும். மிஞ்சிய ஆயுதங்களைப் பயன்படுத்த அந்நாடுகளால் முடியாது. ஏனென்றால் அவற்றைச் செலுத்த வேறு ஊர்திகளை அவை இந்த வல்லரசுகளிடம் கேட்டுப்பெற வேண்டும்.

இந்த ஆயுதக் குறைப்பு உடன்படிக்கை பதினைந்து ஆண்டுகளுக்கு அமுலில் இருக்கும். அதற்குப்பின் ஐந்தைந்து ஆண்டுகளுக்கு ஒருமுறையாகப் பரிசீலித்துத் தக்க மாற்றங்களைச் செய்துகொள்ள வழி செய்யப்பட்டுள்ளது. இந்த உடன்படிக்கை சரியாகச் செயல்படுத்தப்படுகிறதா என்று கண்காணிக்க இரு நாடுகளிலும் தனித்தனி குழுக்கள் அமைக்கப் பட்டுள்ளன.

இந்த உடன்படிக்கையால் உலகம் அமைதி வழியில் செல்ல அடிவைத்து முன்னேறும் என நாம் நிச்சயமாக எதிர்பார்க்கலாம்.





# பேயாட்டம்

வேப்பூர் என்ற ஊரில் ஒரு பழைய அரச மரம் இருந்தது. ஒரு நாள் சுக்குட்டி என்ற பேய் அந்த மரத்தில் வந்து தங்கியது. பிறரை அழவைத்து வேடிக்கை பார்ப்பது என்பதே அதன் தினசரி வேலை.

ஒருநாள் மாலை ஏழுமலை என்பவனும் கிட்டு என்பவனும் அந்த அரசமரத்தடியே வந்து உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். இருவரும் நண்பர்கள். இருவரையும் சண்டை போடவைத்து வேடிக்கை பார்க்க சுக்குட்டி விரும்பியது. அதனால் அவ்விருவர்களுக்கும் தென்படாமல் கீழே இறங்கி ஏழுமலையின் குடுமியைப் பிடித்து இழுத்தது.

ஏழுமலை தன் குடுமியைப் பிடித்து இழுத்தவன் கிட்டுதான் என எண்ணினான். உடனே "ஏன் என் தலை மயிரைப் பிடித்து இழுத்தாய்?" என்று கேட்டு அவன் கிட்டுவின் கன்னத்தில் 'பளா' ரென ஒரு அறை விட்டான். கிட்டுவோ "நான் எங்கே இழுத்தேன்? நீ சொல்வது முழுப் பொய்" என்று கூறி அவனை ஓங்கிக் குத்தினான். இப்படியாக இருவரும் அடித்து உதைத்துக் கொண்டு முடிவில் நியாயம் கேட்க கிராம அதிகாரியிடம் சென்றனர். சுக்குட்டியும் அவர்களின் பின்னாலேயே சென்றது.

கிராம அதிகாரி தன் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு சுருட்டுப் பிடித்துக் கொண்டிருந்தார். ஏழுமலையும் கிட்டுவும் வருவது கண்டு அவர் சுருட்டை வாயிலிருந்து எடுத்துத் தன் பக்கத்தில் வைத்து விட்டு "என்ன விஷயம்?" என்று கேட்டார். ஏழுமலை முதலில் தன் குடுமியைப் பிடித்து கிட்டு இழுத்ததைக் கூறினான்.

-சிவனார் செல்வன்-



மிரட்டி அனுப்பி விட்டார்.

எரிந்து ஓட்டையான சட்டையைக் கழற்றி விட்டு வேறு சட்டை போட்டுக் கொள்ள அவர் வீட்டிற்குள் சென்றார். சுக்குட்டியும் அவரோடு உள்ளே சென்றது. கிராம அதிகாரியின் மனைவி மங்கம்மா மகா வாயாடி. அவள் தன் கணவன் அணிந்திருந்த சட்டை எரிந்திருந்ததைக் கண்டு "ஐயோ! எவ்வளவு நல்ல சட்டை! சுருட்டைப் பைக்குள் போட்டுப் பாழாக்கி விட்டாயே!" என்று கத்தினாள்.

இதற்குள் கிராம அதிகாரியைச் சீண்டி வேடிக்கை பார்க்க நினைத்த சுக்குட்டி எரிந்து கொண்டிருந்த சுருட்டை எடுத்து அவருக்குத் தெரியாமல் அவரது சட்டைப் பைக்குள் போட்டு விட்டது.

விசாரணை செய்து கொண்டிருந்த கிராம அதிகாரி திடீரெனத் தன் சட்டைப் பையிலிருந்து புகை வருவதைக் கண்டு திகைத்தார். திடீரென்றுத் தன் சட்டைப் பையில் தீப்பற்றியது கண்டு சட்டைப் பைக்குள் கைவிட்டார். எரிந்து கொண்டிருந்த சுருட்டு அவரது கை விரலைச் சுட்டு விட்டது. வலி தாங்க முடியாமல் கோபம் கொண்ட அவர் தன் எதிரே இருந்த ஏழுமலை மீதும் கிட்டு மீதும் கோபம் கொண்டு

அப்போது சுக்குட்டி கிராம அதிகாரியின் கைத்தடியை அவர் கையில் வைத்து மங்கம்மாவின் முதுகில் ஒரு அடி கொடுக்கச் செய்தது. கிராம அதிகாரி தன் கைப் பிரம்பு எப்படி உயர்ந்து தன் மனைவியை அடித்தது என்று எண்ணித் திகைத்துக் கொண்டிருந்தார்.

அடிபட்ட மங்கம்மாவோ "ஐயோ! என்னை அடித்துக் கொல்கிறாயா! உன் வண்டவாளத்தை ஊரெல்லாம் அம்பலப்படுத்துகிறேன் பார். நேற்று நீ குருசாமியிடம் ஐநூறு ரூபாய் வாங்கிக் கொண்டு பட்டாவைத் திருத்தித் தந்தாயே" என்றாள்.

அவள் போட்ட கூச்சலைக் கேட்டு ஊரார் கூடிவிட்டார்கள். மங்கம்மா அவர்களிடம் தன் கணவன் தன்னை அடித்ததையும் அவன் லஞ்சம் வாங்கியதையும் சொன்

னாள். இதனால் ஊர் முழுவதும் கிராம அதிகாரி லஞ்சம் வாங்கி விட்டார் என்ற செய்தி பரவிவிட்டது. ஊரார் உயர் அதிகாரிகளுக்கு கிராம அதிகாரி லஞ்சம் வாங்குபவர் என்று புகார் மனு கொடுத்தார்கள். அவ்வளவுதான். அந்த கிராம அதிகாரி வேலை நீக்கம் செய்யப்பட்டு புதிய அதிகாரி நியமிக்கப்பட்டார்.

இதற்குப் பிறகு ஒரு வாரம் கழிந்தது. ஒருநாள் சுக்குட்டி தன் அரச மரத்தில் உட்கார்ந்திருந்த போது இரு முரட்டுப் பேர்வழிகள் அந்த மரத்தின் கீழ் வந்து உட்கார்ந்ததைக் கண்டது. அவர்கள் தாழ்ந்த குரலில் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களருகே சுக்குட்டி போய் நின்று அவர்கள் பேசியதிலிருந்து அவர்கள் திருடர்கள் என்று தெரிந்து கொண்டது. ஒருவன் பெயர் கண்ணன். மற்றவன் பெயர் சின்னான்.

சற்று நேரத்திற்குப்பின் அந்த இரு திருடர்களும் அங்கிருந்து கிளம்பினார்கள். சுக்குட்டியும் அவர்கள் பின்னால் சென்றது. அவர்கள் வட்டிக்கடை வேலுவின் வீட்டிற்குப் போனார்கள். கண்ணன் அந்த வீட்டுச் சுவரில் கன்னம் வைத்து நுழையலானான். சின்னான் சற்று தூரத்தில் காவலாக நின்றான்.

கன்ன ஓட்டை வழியாகக் கண்ணன் புகமுயன்றபோது சுக்குட்டி



அவனது காலைப் பலமாகப் பிடித்து இழுத்தது. தன்னை எச்சரிக்கவே சின்னான் அவ்வாறு செய்கிறான் என நினைத்துச் சற்றுப் பேசாமல் இருந்தான். மறுபடியும் சுக்குட்டி கண்ணனை இழுக்கவே அவன் கோபத்தோடு "என்னடா இது? என்னை உள்ளேயும் போகவிடாமல் வெளியேயும் வரவிடாமல் ஏன் அமுக்குகிறாய்?" என்று கேட்டான்.

சின்னானும் "நான் எங்கே உன்னை இழுத்தேன்? சும்மா கத்தாதே" என்றான். கண்ணனோ "மறுபடியும் அமுக்குகிறாயே! என்னை விடு". என்றான். சின்னான் மறுக்கவே கண்ணனுக்கும் அவனுக்குமிடையே பலத்த வாக்குவாதம் ஏற்பட்டது.



அவர்கள் குரல்கள் உயரவே அக்கம்பக்கத்திலுள்ளவர்கள் விழித்து எழுந்து ஓடி வந்து அந்த இரு திருடர்களையும் பிடித்துக் கொண்டார்கள். அவர்களைக் காவல் வீரர்களிடம் ஒப்படைக்க அவர்கள் இருவரும் சிறையில் அடைக்கப்பட்டார்கள்.

சிறைச்சாலையில் காவலதிகாரி அவர்களைக் கண்டு "ஏன் இப்படி வந்து நீங்களாக மாட்டிக் கொண்டீர்கள்? இப்போது நீங்கள் மாதா மாதம் கொடுத்து வரும் பணம் நின்று போகிறதே. நான் உங்களை இப்போது விடுதலை செய்கிறேன். நாளை மாலைக்குள் எனக்கு ஆயிரம் வராகன்கள் கொண்டுவந்து கொடுத்தால் உங்கள் வழக்கை அமுக்கி விடுகிறேன்" என்று கூறி அவர்களை சிறையிலிருந்து வெளியே அனுப்பினான்.

இதை எல்லாம் கண்ட சுக்குட்டி காவலதிகாரிக்குத் தக்க விதத்தில் பாடம் கற்பிக்க வேண்டும் என நினைத்தது. கண்ணனும் சின்னானும் காவலதிகாரிக்குப் பணம் கொடுக்க என்ன செய்வது என்று சுக்குட்டி இருந்த மரத்தடியே உட்கார்ந்து யோசித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது சுக்குட்டி அவ்வூரிலுள்ள ஜமீன்தாரரின் வீட்டிலிருந்து பல நகைகளை எடுத்து மூட்டையாகக் கட்டிக் கொண்டு வந்து அந்தத் திருடர்களின் முன்னால் போட்டது.

திருடர்கள் அதைக் கண்டு மகிழ்ந்து ஆயிரம் வராகன்களுக்கு மேல் மதிப்புப் பெறும் சில நகைகளைக் காவலதிகாரிக்குக் கொடுத்து விட்டு மற்ற நகைகளைத் தாம் எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள்.

மறுநாளே காவலதிகாரியின் மனைவி அந்த நகைகளை அணிந்து கொண்டு ஜமீன்தாரரின் மனைவியைக் காணச் சென்றாள். ஜமீன்தாரரின் மனைவி தன் நகைகளை அவள் அணிந்திருப்பது கண்டு சந்தேகப்பட்டு அது பற்றி உடனே தன் கணவனிடம் கூறினாள்.

ஜமீன்தாரரும் காவலதிகாரியின் மனைவியிடம் அந்த நகைகள்

அவளுக்கு எப்படிக் கிடைத்தன என்று மிரட்டிக் கேட்கவே அவளும் அவற்றைத் தன் கணவன் முன் தினம் தனக்குக் கொடுத்ததாகக் கூறினாள். ஜமீன்தாரர் காவலதி காரியை அழைத்து வரச் சொன் னார். காவலதிகாரி வந்த போது காவல் வீரர்கள் ஜமீன்தாரர் வீட்டு நகைகளை கண்ணனும் சின்னானும் கடைத் தெருவில் விற்க முயன்றதா கக் கூறி இழுத்து வந்து அவர்முன் நிறுத்தினார்கள். விசாரணையின் போது காவலதிகாரி லஞ்சமாக அந்த நகைகளைப் பெற்றது தெரிந் தது. காவலதிகாரியும் திருடர்களும் தண்டிக்கப்பட்டு சிறைச்சாலையில் அடைக்கப்பட்டார்கள்.

ஒருநாள் வேப்பூர்வாசிகளில் சிலர் அந்த அரச மரத்தின் கீழ் உட் கார்ந்து கொண்டு ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் அவ்வூரிலுள்ள பண்டி தரும் மந்திரங்கள் கற்றவருமான மணிகண்டனைப் பற்றிப் பேசி னார்கள். அவர் தன் உயிருக்கு உயிராகத் தன் நான்கு வயதான பேரனை நேசிக்கிறார் என்றும் அச்சிறுவனைப் பிரிந்து இருக்க அவரால் முடியாது என்றும் கூறி னார்கள்.

அதைக்கேட்ட சுக்குட்டி அந் தப் பண்டிதரைக் கொஞ்சம் ஆட்டி வைத்து வேடிக்கை பார்க்க நினைத் தது. அது உடனே அந்தப் பண்டி தரின் வீட்டிற்குச் சென்றது. அங்கு கொல்லையில் விளையாடிக் கொண்டிருந்த அவரது பேரனைத் தூக்கிக் கொண்டு போய்ச் சற்று



தூரத்திலுள்ள ஒரு பழத் தோட்டத்தில் விட்டது. அங்கு அது அச்சிறுவனின் முன் சில பழங்களைப் பறித்துப் . போட்டது. பிறகு அது என்ன நடக்கும் என்பதைக் காண அங்கே ஒரு மாமரத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டது.

பண்டிதர் ஒரு சிலரோடு தம் பேரனைத் தேடிக் கொண்டு அந்தப் பழத்தோட்டத்திற்கு வந்து சேர்ந்தார். அங்கு தன் பேரன் பழங்களைத் தின்று கொண்டு உட்கார்ந்திருப்பதைக் கண்டு அவர் ஆச்சரியப்பட்டார். அச்சிறுவன் அங்கு வந்ததில் ஏதோ மர்மம் இருப்பதாக அவர் நினைத்தார்.

உடனே மற்றவர்களை எல்லாம் விலகி இருக்கும்படி அவர் கூறினார். அதே இடத்தில் அவர் கோடுகள் போட்டு மந்திரங்கள் கூறி சுக்குட்டியை அங்கு வரவழைத்தார். சுக்குட்டியும் அவரது மந்திரத்திற்குக் கட்டுப்பட்டு வந்து நின்றது. அவர் கேட்ட கேள்விகளுக்கு அது விவரமாகப் பதில் கூறியது. தான் அந்த மரத்திற்கு வந்து ஏழுமலை, சின்னான் சண்டையிலிருந்து அது வரை தான் செய்ததை எல்லாம் கூறியது.

அப்போது அவர் சுக்குட்டியிடம் "இதுவரை நீ செய்தது சரியே. லஞ்சம் வாங்கும் கிராம அதிகாரிக்கு தண்டனை வாங்கிக் கொடுத்தாய். காவலதிகாரியின் ஊழலை அம்பலப்படுத்தி சிறையில் அடைத்தாய். திருடர்களையும் பிடித்துக் கொடுத்தாய். இதெல்லாம் சரி. ஆனால் நீ என் பேரனை இங்கு கடத்தி வந்தது சரியான செயல் அல்ல. அதற்காக உனக்கு ஒரு தண்டனை கொடுக்கப் போகிறேன் நீ இப்போதே இந்த ஊரை விட்டு வெகு தூரம் போய்விட வேண்டும். மறுபடியும் இங்கே வரக் கூடாது" என்றார்.

சுக்குட்டியும் அங்கிருந்து வெகு தூரத்திலுள்ள ஒரு மலைப் பகுதிக்குப் போய்விட்டது.






## 8

*[விநோதன் கூறியபடி சுகுமாரன் ஐந்து சிறுவர்களைக் கடல் கொள்ளைக்காரர்களிட மிருந்து மீட்க திட்டத்தைச் செயல்படுத்தினான். அதன்படி மற்றொரு கப்பலில் வந்தவர்களின் உதவியால் கொள்ளைக்காரர்களைச் சிறைப்படுத்தி அச்சிறுவர்களையும் கரைக்கு கொண்டு வந்தான். அதன் பிறகு-]*

தம் புதல்வர்கள் திரும்பி வந்தது கண்டு அந்த ஐந்து சிறுவர்களின் பெற்றோர்களும் மிகவும் மகிழ்ச்சி அடைந்தனர். கடல் கொள்ளைக் காரர்கள் பிடிபட்டு அரசாங்கத்திடம் ஒப்படைக்கப்பட்டது கண்டு மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். மன்னன் கொள்ளைக்காரர்களுக்கு கடும் தண்டனை விதித்துச் சிறையில் தள்ளினான். சுகுமாரனையும் ஐந்து சிறுவர்களையும் அவர்களது துணிச்சலான வீரச் செயலுக்காகப் பாராட்டினான்.

சுகுமாரன் மனதிலோ "இந்தப் பாராட்டுதல்கள் எல்லாம் விநோதனை அல்லவா சேர வேண்டும்? நான் அவன் கூறியபடிதானே செய்தேன். இதற்கு ஏற்றவனா நான்?" என்று எண்ணமிட்டான்.



தாங்களும் அடுத்த விநாடியே இங்கு வந்து விட்டீர்கள். இது அதிசயத்திலும் அதிசயம்தான்" என்றான்.

விநோதனோ "நீ என்னவோ மகிழ்ந்து போவதற்காக என்னை நினைத்துக் கொண்டதாகக் கூறுகிறாய். ஆனால் இந்த உலகில் அதுவும் இந்த நாட்டிலேயே உண்ண உடுக்க எதுவும் இல்லாமல் எவ்வளவு பேர்கள் தவிக்கிறார்கள் என்று உனக்குத் தெரியுமா? இருக்க இடம் இல்லாமலும் நோயால் வருந்துபவர்களும் எவ்வளவோ பேர்கள் இருக்கின்றார்கள். அவர்களைப் பற்றி நினைத்தால் நமக்கு மகிழ்ச்சி என்பதே கிடையாதே. அவர்களது இந்த அவல நிலையைப் போக்க நீ உதவ வேண்டாமா?" என்று கேட்டான்.

சுகுமாரனும் "நான் அவர்களுக்கு எந்த விதத்தில் உதவ முடியும்? அவர்களது துன்பங்களைக் கண்டு அவற்றைப் போக்க வேண்டும் என்றுதான் நினைக்கிறேன். ஆனால் அதற்கு அடிப்படையான காரணம் அவர்களது வறுமை. அவர்களது துயர் துடைக்க வேண்டுமானால் அதற்குப் பணம் வேண்டும். அதற்கு நான் எங்கே போவேன்?" என்று கேட்டான்.

விநோதனும் "நல்ல கேள்வி இது. உனக்குப் பணம் தானே வேண்டும்? அது கிடைக்கும்படி நான் செய்கிறேன். ஆனால் நீ சற்று

பாராட்டுகளின் அமளி அடங்கியதும் சுகுமாரன் தன் வீட்டின் அருகே ஜனசந்தடி இல்லாத ஒரு இடத்திற்குச் சென்றான். அவன் மனதினுள் எப்போது தென்பட வேண்டும் என நினைத்ததும் தான் அவன் முன் தோன்றுவதாக விநோதன் கூறி இருந்தான். எனவே சுகுமாரன் விநோதனை உடனேயே காணவேண்டும் என நினைத்தான். மறுவிநாடியே சுகுமாரனின் முன் விநோதன் வந்து நின்றான்.

"சுகுமாரா! என்னை ஏன் நினைத்துக் கொண்டாய்?" என்று அவன் கேட்கவே சுகுமாரனும் "தங்களைக் கண்டு மகிழ வேண்டும் என்ற எண்ணம் என் மனதில் எழவே தங்களை நினைத்துக் கொண்டேன்

முன் பணத்திற்கு எங்கே போவது என்று கேட்டாயே. ஓரிடத்திற்கு நீ போய்தான் எடுத்து வரவேண்டும் திரை கடல் ஓடியும் திரவியம் தேடு என்று சொல்லக் கேட்டிருக்கிறாயா?" என்று கேட்டான்.

சுகுமாரனும் "ஆம். கேட்டிருக்கிறேன். அது குறிப்பாக வணிகர்களுக்காகக் கூறப்பட்டது தானே. என் போன்றவர்கள் கடல் கடந்து சென்றாலும் ஏராளமாகப் பணம் சம்பாதித்துக் கொண்டு வரமுடியாது" என்றான்.

விநோதனும் "நீ கடல் கடந்து போய் நிறையப் பணம் கொண்டு வரப்போகிறாய் அதற்கான வழியைக் கூறுகிறேன். நாம் கொள்ளைக்காரர்களின் கப்பலில் இருந்தபோது அவர்கள் பேசியதைக் கேட்டேன். அவர்கள்தாம் கொள்ளை அடித்த நகைகளையும் விலையுயர்ந்த பொருள்களையும் தங்க வெள்ளி நாணயங்களையும் மலைத்தீவில் மறைத்து வைத்திருக்கிறார்கள் என்று நான் தெரிந்து கொண்டேன். அத்தீவிற்குச் சென்று பணத்தை எடுத்து வரலாம். ஆனால் இதில் ஆபத்தும் உள்ளது" என்றான்.

சுகுமாரனும் "ஆபத்தை எதிர்க்க நான் தயார். அப்படி என்ன ஆபத்து?" என்று கேட்க விநோதனும் "கொள்ளைக்காரர்கள் தாக்கப்பட்டபோது அவர்களில் சிலர் தப்பிவிட்டார்கள். அவர்கள் மலைத்



தீவிற்குப் போயிருப்பார்கள்" என்றான்.

சுகுமாரனும் "கொள்ளைக்காரர்கள் நகைகளையும் பணத்தையும் பதுக்கி வைத்துள்ள இடத்திற்குப் போய் அவற்றை எடுத்து வர அந்த ஒரு சில கொள்ளைக்காரர்கள் தடையாக இருப்பார்கள் என்று தானே கூறுகிறீர்கள். அதையெல்லாம் சமாளித்துவிடலாம். ஏழைகளுக்கு உதவ எத்தகைய ஆபத்தையும் எதிர்க்கத் தயார்" என்றான்.

விநோதனும் "நாம் இப்போதே கிளம்பிச் சென்றால் ஒரு வேளை கொள்ளைக்காரர்களை முந்திக் கொண்டு அத்தீவிற்குப் போய்ப் பணத்தை எடுத்து வந்து விடலாம். ஆனால் அவர்கள் நமக்கு முன்பாக



அங்கே போய்விட்டால் அவர்கள் அப்பணத்தை எடுத்துச் செல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்'' என்றான்.

அப்போது சுகுமாரன் "நம்மோடு இன்னும் சிலர் இருந்தால் நல்லது தானே. நாம் விடுவித்த அந்த ஐந்து சிறுவர்களையும் கூட அழைத்துச் செல்லலாமே?'' என்று கேட்டான். விநோதனும் நல்லதே. அவர்களது பெற்றோர்களிடம் பேசி அவர்களது அனுமதியுடன் அழைத்துச் செல்லலாம்'' என்று சொன்னான்.

விநோதனும் சுகுமாரனும் அச்சிறுவர்களின் பெற்றோர்களைக் கண்டு விஷயத்தை விளக்கிக் கூறினார்கள். அவர்களும் தன் புதல்வர்களை அனுப்பினார்கள். யாவரும் மாலையாகும் போது கடற்கரைக்குப் போனார்கள். விநோதன் தன் கண்களை மூடிக்கொண்டு விசித்திர மீன்கள் வரவேண்டும் என்று நினைத்தான்.

இரண்டொரு நிமிடங்களில் பல விசித்திர மீன்கள் வந்தன. விநோதன் அவற்றின் மீது ஏறி உட்கார்ந்து கொள்ளச் சொன்னான். சுகுமாரனும் அந்த ஐந்து சிறுவர்களும் ஆறு மீன்களின் முதுகில் உட்கார்ந்தனர். விநோதனும் ஒரு மீனின் மீது அமர்ந்தான். ஏழு மீன்களும் கடலில் செல்ல அவற்றின் நான்கு புறங்களிலும் மற்ற மீன்கள் காவலாகச் சென்றன.

அவை விநோதன் கூறிய வழியில் சென்றன. அமைதியான கடலில் அவை வெகுவேகமாக நீந்தின. அந்தக் குழுவின் தலைக்கு மேல் ஒரு சில காகங்களும் பறந்தவாறே போய்க் கொண்டிருந்தன. இப்படியாக வெகு நேரம்பயணம் செய்த பின் நிலவொளியில் அவர்கள் மலைத்தீவைக் கண்டார்கள்.

விசித்திரமீன்கள் அவர்களை அத்தீவின் கரையில் கொண்டு போய்விட்டன. அவர்கள் கரை இறங்கியதும் அந்த மீன்கள் திரும்பி போய்விட்டன. அவர்கள் அத்தீவிலுள்ள மலைகளைப் பார்த்தார்கள். அவற்றில் பல குகைகள் இருப்பது தெரிந்தது.

கடல் கொள்ளைக்காரரர்கள் அவற்றில் எந்த குகைக்குள் தாம் கொள்ளை அடித்தவற்றைப் பதுக்கி வைத்திருக்கிறார்கள் என்று எப்படிக் கண்டுபிடிப்பது? எல்லா குகைகளுக்குள்ளும் போய்த் தேடுவது என்பது எவ்வளவு சிரமமான வேலை!

அவர்கள் ஒரு மலையிலுள்ள ஒரு குகையின் வாசலில் நின்று எட்டிப் பார்த்தார்கள். உள்ளே எதோ பளபளவென்று மின்னுவதைக் கண்டார்கள். சுகுமாரன் அந்த குகைக்குள் போக அடி எடுத்து வைத்தான். உள்ளே ஒரே இருட்டாக இருக்கவே நான்கடி போனதும் அவன் மண்டியிட்டுக் கூர்ந்து பார்க்கலானான். உள்ளே பாம்புகள் புஸ் புஸ்ஸென்று சீறியதைக் கண்டு உள்ளே போகாமல் திரும்பி வெளியே வந்தான்.

அப்போது ஒரு சிறுவன் "இப்போது நமக்கு மலைதீவு இருக்கும் இடம் தெரிந்துவிட்டது. அதனால் இப்போது திரும்பிப் போய்விட்டு சில நாட்கள் கழிந்த பின் இங்கு வந்து சாவகாசமாகத் தேடலாமே. அவசரப்பட வேண்டாமே" என்றான்.

அப்போது விநோதன் "உஷ் சத்தம் போடாதீர்கள். எல்லோரும் சட்டென அந்தப் பாறைக்குப் பின்னால் போய் மறைந்திருக்க வேண்டும்" என்று கூறினான். உடனே எல்லோரும் ஓசைப்படுத்தாமல் போய் அந்தப் பாறையின்



பின்னால் மறைந்து நின்றார்கள்.

அப்போது சற்று தூரத்தில் ஒருவன் பயங்கரமாய்ப் பேய்ச் சிரிப்பு சிரித்துக் கொண்டு வருவதை அவர்கள் கண்டார்கள். அவன் பின்னால் சிலர் வந்து கொண்டிருந்தார்கள். முதலில் வந்தவன் "நாம் பத்து வருடங்களுக்கு முன் இங்கு மறைத்து வைத்த பொருள்கள் எல்லாம் இன்று நமக்குக் கிடைக்கப் போகிறது. இதுவரை நாம் ஆவலாக அடைய நினைத்த மாபெரும் நிதி நமக்கு கிடைக்கப் போகிறது. நம்மைத் தடுத்தவர்கள் எல்லோரும் அழிந்து போய்விட்டார்கள். இனி நம்மைத் தடுக்க இங்கு யாருமே இல்லை" என்றான்.

அப்போது வேறொருவன் "நீங்



கள் கூறுவது சரியே. நம்மைத் தடுக்க யாரும் வரப்போவதில்லை. எனவே முதலில் நாம் சாப்பாட்டை கவனிப்போம்'' என்றான்.

அப்போது முதலில் பேசியவன் ''இப்போது சாப்பாடா? ஊஹூம் கூடாது. நாம் எடுத்த வேலையை முடித்த பிறகே சாப்பாடு. எனவே சற்றும் தாமதிக்க வேண்டாம்'' என்றான் கடுகடுப்புடன். அப்போது சாப்பிட யோசனை கூறியவன் ''இப்போது என்ன அவசரம்? இந்த நிதி ஒன்றும் இறக்கை முளைத்து எங்கும் பறந்து போய் விடப் போவதில்லை. சாப்பிட்டு இளைப்பாறி விட்டுப் பண்த்தையும் நகைகளையும் நவரத்தினங்களையும் நம் கப்பலுக்கு எடுத்துச் செல்லலாம்'' என்றான்.

அப்போது அவர்களது தலைவன் போலத் தென்பட்ட முரடன் ''சாப்பாடா இப்போது முக்கியம்? நாம் இங்கே வந்தது மாபெரும் நிதியை அடையத்தானே ஒழிய சாப்பிடுவதற்கு அல்லவே'' என்றான்.

அப்போது இன்னொருவன் ''ஆமாம். தலைவர் கூறுவது சரிதான். முதலில் நாம் வந்த வேலையைக் கவனிப்போம். பிறகுதான் மற்றவை'' என்றான். விநோதனும் மற்ற சிறுவர்களும் பாறைக்குப் பின் இருந்தவாறே அவர்கள் பேசியதை எல்லாம் கேட்டனர். அவர்கள் செய்யப் போவது என்ன என்றும் பார்க்கலானார்கள்.

அங்கு வந்தவர்கள் மொத்தம் ஐந்து பேர்களே. அவர்கள் குகைக்குள் சென்று பெட்டிகளைத் தூக்கிக் கொண்டு போய் கடலில் நிறுத்தப்பட்ட ஒரு கப்பலில் ஏற்றினார்கள். அவர்கள் பல தடவைகள் குகைக்கும் கப்பலுக்குமாகப் போய் பெட்டிகளைச் சுமந்து சென்று கப்பலில் வைத்தார்கள். அதனை பாறைக்குப்பின் மறைந்திருந்து விநோதன் பார்த்தான்.

இப்படியாக ஒரு மணி நேரம் கழிந்தது. அப்போது முரட்டுத் தலைவன் ''இப்போது சாப்பிடப் போகலாம். நாம் மறைத்து வைத்திருந்த பொருள்களை எல்லாம் கப்பலில் ஏற்றியாகிவிட்டது. வந்த

வேலை முடிந்து விட்டது. இனி கவலை இல்லை'' என்றான்.

அந்த ஐந்து கொள்ளைக்காரர் களும் தாம் கொண்டு வந்த உணவை எடுத்து வைத்துக் கொண்டு சாப் பிட்டார்கள். அதன் பிறகு அவர் கள் தாம் கொண்டு வந்த பானத்தை யும் அருந்தினார்கள். அதன்பிறகு ஆடிப்பாடி மகிழ்ந்தார்கள். சற்று நேரத்திற்கெல்லாம் அவர்கள் படுத்து மெய்மறந்து உறங்கலானார்கள்.

அதைக் கண்ட விநோதன் "இது தான் சரியான சமயம். நாம் இங் கிருந்து சத்தம் செய்யாமல் போய் விடலாம்'' என்றான் அப்போது ஒரு சிறுவன் "அந்த விசித்திர மீன்கள் கடற்கரையில் நமக்காக இருக் குமா?'' என்று கேட்டான்.

விநோதனும் "இல்லை. நாம் அவற்றின் மீது உட்கார்ந்து கொண்டு போகப் போவதில்லை. நமக்கா கக் கப்பலை இந்த முரடர்கள் விட்டு வைத்திருக்கிறார்கள். அதில் ஏறிச் சுகமாகப் போகலாம். நமக்கு சிரமம் கொடுக்காமல் அவர்கள் நாம் எடுத்துச் செல்ல விரும்பிய பணத்தையும் விலையுயர்ந்த பொருள் களையும் அதில் ஏற்றி வைத்து விட்டார்கள்'' என்றான்.

விநோதன் ஆறு சிறுவர்களுடன் கடற்கரைக்கு வந்தான். அங்கு கட லில் நின்று கொண்டிருந்த கப்பலுக்கு அவர்களை அழைத்துச் சென்றான். எல்லோரும் அதில் ஏறினார்கள். விநோதன் கண்களை மூடிக் கொண்டு ஒருநிமிடம் மௌனமாக இருந்தான். அவன் கண்களைத் திறந்ததும் முன்பு வந்த விசித்திர மீன்கள் வந்து அந்தக் கப்பலை வேகமாகத் தள்ளிக் கொண்டு சென்றன.

அந்தக் கப்பல் மலைத்தீவை விட்டு வெகுதூரம் போய்விட்டது. சிறுவர்களின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. விரைவிலேயே தம் நாட் டுக் கடற்கரையை அடைந்து விட லாம் என எண்ணி அவர்கள் மிகுந்த உற்சாகத்துடன் இருந்தார்கள்.

(தொடரும்)





# மனஉறுதி வேண்டும்!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கி செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! ஒரு சிலர் எல்லோருக்கும் நன்மை செய்ய சில சமயங்களில் பிறர் ஏசுவதைப் பொருட்படுத்தாமல் தம் காரியத்திலேயே கண்ணும் கருத்துமாக இருப்பார்கள். நீயும் அப்படித் தானோ? இதுபற்றி உனக்கு ஒரு கதை சொல்கிறேன். கவனமாகக் கேள்" என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தது.

வெகு காலத்திற்கு முன் விதேக நாட்டில் வினயபுரி மண்டலத்தில் வீரக் கிராமம் என்ற ஊர் இருந்தது. அந்த கிராமத்து அதிகாரி

## வேதாளம் சொல்லும் கதை



யிடம் உலகநாதன் என்பவன் பணி யாளாக இருந்த வந்தான். அவன் ஒருநாள் கிராம அதிகாரியிடம் "ஐயா! என் குடும்பம் மிகப் பெரியது. அதை நடத்த சிரமப்படுகிறேன். அதனால் என் மூத்த மகனுக்கு ஏதாவது வேலை போட்டுத் தந்தால் மிகவும் உதவியாக இருக்கும்" என்றான்.

அதைக் கேட்ட கிராம அதிகாரி "இந்தச் சின்ன கிராமத்தில் என்ன வேலை தரமுடியும்? நீ உன் வேலையை விட்டு விட்டு வேறு வேலை பார்த்துக் கொள்வதானால் உன் வேலையை உன் மகனுக்கு நான் கொடுக்கிறேன்" என்றான். உலகநாதனும் வேலையை விட்டு விலகி அதனைத் தன் மூத்த மகனுக்கு வாங்கிக் கொடுத்து விட்டான்.

வேலையை விட்ட பின் உலகநாதன் ஒரு நிலத்தை குத்தகைக்கு எடுத்து விவசாயம் செய்யலானான். அப்போது அவனது தூரத்து உறவினன் ஒருவன் அவனைப் பார்க்க வந்தான். அவன் பணக்காரன். அவன் "இந்த ஊரில் ஒரு நூல் நிலையம் இல்லாதது ஒரு பெரிய குறை. நான் அப்படி ஒரு நிலையம் நிறுவ உதவுகிறேன். ஆனால் அதனைக் காத்து நிர்வகிக்க ஒரு ஊழியர் சம்பளம் இல்லாது வேலை செய்து வரவேண்டும். இப்படிச் செய்ய முடியுமா?" என்று கேட்டான். உலகநாதனும் "ஆகா. இதற்கான ஏற்பாட்டைச் செய்கிறேன்" என்றான்.

அவன் ஊரிலுள்ள நான்கு பெரிய மனிதர்களைச் சந்தித்து நூல் நிலையம் பற்றிக் கூறினான். அவர்களும் "ஆகா! அவர் நூல் நிலையம் நிறுவுவது நல்லதே. உன் இளைய மகனே அந்த நூல் நிலையத்தைக் கவனித்து வரச் சொல். இதற்காக வேறு யாரையும் தேட வேண்டாம்" என்றார்கள்.

புதிய நூல் நிலையம் கட்டி முடித்ததும் அதனைக் கவனித்துக் கொள்ள உலகநாதனின் இளைய மகன் பொறுப்பேற்றான். அதனால் அவன் தன் தந்தைக்கு வயல் வேலைகளில் உதவ முடியவில்லை. இதனால் உலகநாதன் மிகவும்

சிரமப்படலானான்.

ஒருநாள் வினயபுரி மண்டல அதிகாரி வீரக்கிராம அதிகாரியைக் கூப்பிட்டு "உங்கள் கிராமத்தில் பூமிக்கடியில் அப்ரகம் எனப்படும் அபூர்வப் பொருள் புதைந்து கிடக்கிறது. எனவே கிராமத்து மக்களை எல்லாம் வேறு இடத்தில் குடி அமர்த்து. கிராமம் முழுவதிலும் தோண்டிப் பார்க்கும் வேலையை ஆரம்பிக்க வேண்டும்" என்றான்.

அதைக் கேட்ட கிராம அதிகாரி "ஐயோ! இந்த வேலையை என்னால் செய்ய முடியாது. என் ஊராருக்கு நானே கெடுதல் செய்வதா? முடியவே முடியாது" என்றான். இதைக் கேள்விப்பட்ட உலகநாதன் மறுநாளே மண்டல அதிகாரியைக் கண்டு "இந்த ஊராரை இங்கிருந்து போகச் செய்யும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தால் அதைச் செய்து காட்டுகிறேன்" என்றான்.

மண்டல அதிகாரியும் உடனே உலகநாதனுக்கு எல்லா அதிகாரங்களையும் அளித்து அந்த கிராமத்தவரை அங்கிருந்து வெளியேற்றும்படி உத்தரவிட்டான். உலகநாதன் தன் கிராமத்தவரிடம் வீடுகளைக் காலி செய்யுமாறு கூறினான். அவர்கள் அவ்வாறு செய்ய மறுத்தனர். உலகநாதன் சற்றும் தயங்காமல் தலைநகரிலிருந்து



இராணுவத்தை வரவழைத்து எல்லோரையும் வீடுகளை காலி செய்யச் செய்தான். வீட்டுச் சொந்தக்காரர்களுக்கு அவன் நஷ்ட ஈடாகப் பணம் வாங்கிக் கொடுத்தான். ஆனாலும் கிராம வாசிகள் அனைவரும் உலகநாதனைத் திட்டி நொறுக்கினார்கள்.

அந்தத் திட்டம் வெற்றிகரமாக நிறைவேறியதும் மண்டல அதிகாரி உலகநாதனைப் பொதுக்கூட்டத்தில் பாராட்டி கௌரவித்தான். புதிதாக அமைக்கப்பட்ட ஊரின் அதிகாரியாக அவனை நியமித்தான்.

கொஞ்ச காலத்திற்குப் பின் வினயபுரி மண்டலத்தில் பாயும் நதியில் ஒரு அணை கட்டி மக்க

ளுக்கு நீர்ப்பாசன வசதி செய்து கொடுக்க மன்னன் நினைத்தான். அணை கட்டுவதால் சில கிராமங்கள் நீரில் மூழ்கிவிடும். எனவே அந்த கிராமவாசிகளை வேறு இடங்களுக்கு குடிபெயர்ந்து போகச் செய்ய வேண்டும். இதனை மன்னன் வினயபுரி மண்டல அதிகாரியை அழைத்துக் கூறினான்.

மண்டல அதிகாரியோ "அரசே! இது என்னால் முடியாது. இதற்கு மக்கள் ஆதரவும் இராது. மேலும் எதிப்பே வலுக்கும்" என்றான். மன்னனோ அந்த அணைக்கட்டை எப்படியாவது கட்டிவிட வேண்டும் என உறுதி கொண்டிருந்தான். அதனை அறிந்த உலக நாதன் மன்னனைக் கண்டு "அரசே! தாங்கள் மட்டும் எனக்கு அனுமதி அளித்தால் நான் அந்த கிராம வாசிகளை அப்புறப்படுத்தி அணைக் கட்டை கட்டி முடித்து விடுவேன்" என்று கூறினான்.

மன்னனும் வினயபுரி மண்டல அதிகாரியைப் பதவியிலிருந்து நீக்கி விட்டு உலகநாதனை அப் பதவியில் நியமித்தான். அவனும் நீரில் மூழ்கிப் போகும் கிராம வாசிகளை தம் வீடுகளைக் காலி செய்து விட்டு வேறு இடங்களுக்கு போய் வசிக்குமாறு கூறினான். அதற்கு பலத்த எதிர்ப்பு ஏற்பட்டது. உலகநாதன் அது கண்டு மனம் தளரவில்லை. இராணுவத்தை வரவழைத்து பாதிக்கப் படும் கிராமங்களில் வாழும் மக்களை வெளியேற்றி வேறு இடத்திற்கு அனுப்பி அவர்களுக்கு வீடு



கள் கட்டிக் கொடுத்தான். பண உதவியும், கிடைக்கச் செய்தான். ஆனாலும் அவர்கள் அவனை வெறுத்தனர்.

அந்த கிராமவாசிகள் உலக நாதனை சுயநலக்காரன் என்றும் பதவி மோகம் பிடித்தவன் என்றும் திட்டினார்கள். உலகநாதன் அது பற்றிக் கவலைப்படாமல் சில மாதங்களில் அணைக்கட்டை கட்டி முடித்தான். அப்போது மன்னன் உலகநாதனை மக்கள் ஊழியன் என்றும் மாபெரும் தியாகி என்றும் நேர்மையுடன் நடப்பவன் என்றும் புகழ்ந்து பாராட்டினான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! உலகநாதனின் போக்கு பற்றி நீ என்ன நினைக்கிறாய்? அவன் தன் மூத்த மகனுக்காக தன் வேலையைத் தியாகம் செய்து அந்த வேலையைத் தன் மகனுக்கே வாங்கிக் கொடுத்தான். அதற்குப் பின் அவன் இருமுறைகளில் செய் தவை அவன் தான் பெயர் பெற வும் அதிகார வெறிபிடித்து உயர் பதவிகளைப் பெறுவதற்காகவும் தானே? இதற்காக அவன் தன் கிராமவாசிகளையும், மற்றும் சில கிராமவாசிகளையும் தொல்லை களுக்கு உள்ளாக்கினான். அவர் களது கிளர்ச்சிகளை இராணுவ பலம் கொண்டு அடக்கினான். அப்படிப்பட்டவனை மன்னன் தியாகி என்றும் மக்கள் ஊழியன் என்றும் புகழ்ந்தது சரியா? அவன் சுயநலக்காரன் என்பதை மன்னன் அறியவில்லையா? இந்த என் சந் தேகங்களுக்கு எல்லாம் விடை



தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் "உலகநாதன் பதவி மோகம் கொண்டவன் என்றோ, அவன் புகழ் பெற ஆசைப் படுபவன் என்றோ கூற முடியாது. நாட்டு மன்னனைக் குறை கூறுவதும் சரியல்ல. அப்ரகம் என்பது மிக அரிதாக கிடைக்கும் பொருள். அதனை பூமியிலிருந்து வெட்டி எடுப்பதால் நாட்டின் பொருளாதாரம் வளம் பெறும். இதுபோலவே தான் அணைக்கட்டும். ஆற்று நீர் வீணாவதைத் தடுத்து மேலும் பல்லாயிரம் ஏக்கர்களுக்கு நீர் கிடைக்கச் செய்து நாட்டின் உணவு உற்பத்தியை அதிகரித்து மக்களை வளம் பெறச் செய்யவே மன்னன் அந்த அணைக்கட்டைக் கட்டியது. ஆரம்பத்தில் ஒரு சிலர் பாதிக்கப் பட்டதால் அவர்கள் எதிர்ப்பு காட்டியது இயல்பே. ஆனால் அந்தத் திட்டத்தால் பலர் பயனடைந்தனர். மன்னன் இதை எல்லாம் அறிந்தே அந்தத் திட்டத்தை நிறைவேற்ற உறுதி பூண்டான். மண்டல அதிகாரி மக்களின் எதிர்ப்பிற்கு பயந்து போனதைக் கண்டான். ஒரு சிலர் முதலில் தொல்லைகளுக்கு ஆளானாலும் பலருக்கு நன்மை ஏற்படும் என உறுதியாக மன்னன் நம்பியே அத்திட்டத்தை அமல்படுத்த விரும்பினான். இதனை உணர்ந்த உலகநாதன் சிலரது ஏசல்களைப் பொருட்படுத்தாமல் தன்னலம் பாராமல் அத்திட்டத்தை வெற்றிகரமாக முடித்துக் கொடுத்தான். இதனால் மன்னன் உலகநாதனைப் பாராட்டிப் புகழ்ந்தது சரியே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்திற்குப் போய் அதில் ஏறிக் கொண்டது.






# அவன் நாணயம்!

**பா**க்தாதை சுல்தான் அப்துல் அஜீஸ் ஆண்டு வந்தான். அவன் குற்றவாளிகளுக்கு சவுக்கடி மரண தண்டனை, கைகால்களை வெட்டுதல் போன்ற கொடூர தண்டனைகள் அளிக்காமல் அவர்கள் மனதில் செய்த குற்றத்தை உணரச் செய்து நல்லவிதமாகத் திருந்தும்படி செய்து வந்தான். அதனால் அவனது ஆட்சி காலத்தில் திருட்டு, கொலை போன்ற குற்றங்கள் மிகமிகக் குறைவாகவே இருந்தன.

பல வருடங்களுக்குப் பிறகு சுல்தானுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அந்த மகிழ்ச்சியில் சுல்தான் ஏழை எளியவர்களுக்கு தான தர்மங்களைச் செய்தான். அப்படிக் கிடைத்த தர்மத்தில் ஒரு ஏழைக்கு ஒரு மூட்டை தானியம் கிடைத்தது. அவன் அதனைச் சுமந்து கொண்டு தன் வீட்டிற்குப் போனான். அங்கு அதனை அவிழ்த்துக் கீழே கொட்டிய போது அதில் ஒரு தங்க நாணயம் இருப்பதைக் கண்டான்.

உடனே அவன் அதைக் கையில் எடுத்துக் கொண்டு "இந்தக் காசு தவறிப் போய் இதில் கலந்து வந்து விட்டது. இதை இப்போதே கொண்டு போய் சுல்தானிடம் கொடுத்து விட்டு வருகிறேன்" என்றான். அவன் மனைவியோ "இதென்ன பைத்தியக்காரத்தனம். நம் அதிர்ஷ்டம் இது நமக்குக் கிடைத்துள்ளது. பேசாமல் இதனை நாமே வைத்துக் கொண்டு விடலாம்" என்றாள். அந்த ஏழையோ அவள் பேச்சைக் கேட்காமல் அந்த நாணயத்தை எடுத்துக் கொண்டு அரண்மனைக்குப் போய் அதை சுல்தானிடம் கொடுத்தான்.

சுல்தான் அவனது நேர்மையை பாராட்டி ஐம்பது தங்க நாணயங்களைப் பரிசாக அளித்தான். ஏழை

—பழங்கால அராபியக் கதை—

அதை மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டு தன் வீட்டை அடைந்தான்.

இந்தச் செய்தி அந்த ஏழையின் அடுத்த வீட்டில் வசிக்கும் பணக்கார னுக்குத் தெரிந்தது. அவன் தன்மன தில் "ஆ! ஏழை ஒரு தங்க நாண யத்தைக் கொடுத்து ஐம்பது தங்க நாணயங்களைச் சுல்தானிடமிருந்து பெற்றான் என்றால் நான் நூறு தங்க நாணயங்கள் கொடுத்து ஐயாயிரம் தங்க நாணயங்களை அடையலாமே. நானும் ஒரு ஏழை போல ஆடைகளை அணிந்து நாளையே சுல்தானைப் பார்த்து பணம் பெற்று வருகிறேன்" என எண்ணினான்.

அவன் எளிய ஆடைகளை உடுத்து ஒரு பையில் நூறு தங்க நாணயங்களைப் போட்டு எடுத் துக் கொண்டு போய் சுல்தானைக் கண்டு "ஐயா! நேற்று நீங்கள் கொடுத்த தானிய மூட்டையில் இந்த நூறு தங்க நாணயங்கள் இருந்தன. நேர்மையுடன் நடக் கும் நான் இவற்றை தங்களிடம் கொடுக்கிறேன்" எனக்கூறி அவன் முன்வைத்தான்.

சுல்தான் அவற்றைப் பார்த்து விட்டு அவனைப் பார்த்தான். அவன் கைவிரல்களில் தங்க மோதிர மும் வைரமோதிரமும் இருப்பது கண்டு அவன் ஏழையல்ல என்று தெரிந்து விட்டது. தான் முன்தினம் ஒரு ஏழைக்கு ஒரு தங்கக் காசிற்கு ஐம்பது தங்கக் காசுகள் கொடுத் தது அவன் நினைவிற்கு வந்தது. வந்துள்ளவன் பணக்காரன் என்றும் பணத்திற்காகப் பேராசைப்படுப வன் என்றும் ஊகித்து விட்டான்.

உடனே சுல்தான் தன் அமைச் சரிடம் "இந்தப் பணத்தைப் பொக் கிஷத்தில் சேர்த்துவிட்டு இவனது நேர்மையைப் பாராட்டி ஒரு நற் சான்றிதழ் எழுதி நம் முத்திரையை அதில் பதித்துக் கொடுத்து அனுப்பி விடு" என்றான்.

அதைக் கேட்ட அந்தப் பணக்கா ரன் கல்லாய்ச் சமைந்து நின்றான்!



# அம்புலிமாமா அனுபந்தம்—36




நம் கடவுள்:

## அனுமார்

அனுமார் சிறந்த இராம பக்தர். தம் பக்தி பலத்தால் அரிய பல் சாதனைகளைப் புரிந்து உயர்ந்தவர். அனுமார் சிவனின் அம்சம் கொண்டவர். அந்த திவ்விய அம்சத்தோடு வாயு தேவனின் அருள்பெற்று அஞ்சனாதேவி இவரைப் பெற்றெடுத்தாள். இதனால்தான் அஞ்சனையின் மகன் எனக்குறிக்க ஆஞ்சனேயர் என்ற பெயர் இவருக்கு ஏற்பட்டது.

பகவானிடம் பக்தி கொண்டால் எதையும் சாதித்து விடலாம் என நிருபித்துக் காட்டியவர் அனுமார். நூறு யோசனை தூரக் கடலைத் தாண்டி, சீதையைக் கண்டு ஆறுதல் கூறி, இராவணனின் கர்வத்தைக் குலைத்து, சஞ்சீவி மலையை அடியோடு பெயர்த்து எடுத்து வந்து இலட்சுமணனின் உயிரைக் காத்தவர் அனுமார்.

அற்புத சக்தியும், அரிய சாதனைகள் புரிந்தும், வீரதீரச் செயல்களைச் செய்தும், மிகப் பணிவுடன் இருந்தவர் அனுமார். எங்கெல்லாம் இராமநாமம் ஜெபிக்கப்படுகிறதோ அங்கெல்லாம் அனுமார் இருப்பார் என அவரது பக்தர்கள் நம்புகிறார்கள். இவரை பக்தி சிரத்தையுடன் வணங்கி வழிபடுவோருக்கு இவர் எவ்விதத் துன்பம் நேர்ந்தாலும் அதனைப் போக்கி நல்ல சுபகர முடிவையே இவர் ஏற்படுத்துவார் என்பது இவருடைய பக்தர்களின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும்.

# தட்டெழுத்து வீரர்

பெல்ஜிய நாட்டுத் தலைநகர் பிரசல்ஸில் கடந்த ஜூலை மாதத்தில் அகில உலக சுருக்கெழுத்து தட்டெழுத்து கூட்டமைப்பு தனது 39வது பேரவையைக் கூட்டியது. அச்சமயம் 'இண்டர் ஸ்டெனோ 1991' சாம்பியனுக்கான போட்டிகளை அந்த அமைப்பு நடத்தியது. அவற்றில் இருபது வயதிற்குக் கீழான இளைஞர்களுக்கான போட்டியில் நம் நாட்டைச் சேர்ந்த அபிஷேக் ஜெயின் என்ற பதிமூன்று வயதான சிறுவன் முதலிடம் பெற்றான்.

பஞ்சாப் மாநிலத்து ஜலந்தர் மாவட்டத்தில் கோரியாபூரைச் சேர்ந்தவன் அபிஷேக் ஜெயின். இச்சிறுவன் நிமிடத்திற்கு 109.2 வார்த்தைகள் வீதம் தட்டெழுத்தில் சாதனை புரிந்தான். இவன் இதில் 99.93 சதம் மிகத் தெளிவாக 'டைப்' செய்திருந்தான். இந்த சாதனை இருபது வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு நடத்தப்பட்ட போட்டியில் இரண்டாவது இடம் பெற்றவரைவிட மிகச் சிறந்ததாக இருந்தது என பாராட்டினர். அபிஷேக்கின் நிமிடத்திற்கு 546 ஸ்ட்ரோக் வேகத்தில் 511 ஸ்ட்ரோக்கள் மிகத்துல்லியமாக இருந்தன.




அபிஷேக் பத்தாம் வகுப்பு மாணவன். அவனுக்குப் போதிய வயதாகவில்லை என்று அவனை 'லோயர்' பரீட்சையில்கூட அனுமதிக்கவில்லை. அபிஷேக்கின் தந்தை ஒரு தட்டெழுத்து நிலையத்தை நடத்தி வருகிறார். அபிஷேக் தினமும் பள்ளிக்கூடம் விட்டதும் அங்கு வந்து தட்டெழுத்து கற்கலானான். இதைக்கண்ட அவனது தந்தை அவனுக்கு உற்சாகம் அளித்து ஊக்குவித்தார். இப்படியாக ஐந்தாறு ஆண்டுகள் கழிந்தன.

அபிஷேக் நம் நாட்டில் பல போட்டிகளில் கலந்து கொண்டும், 1987ல் தேசிய சாம்பியன் பட்டத்தையும் பெற்றான். புகழ் பெற்ற ஒரு 'டைப்ரைட்டர்' நிறுவனத்தின் உதவியோடுதான் இவன் பிரசல்ஸில் நடந்த போட்டியில் கலந்து கொண்டு முதலிடம் பெற்றான்.

அபிஷேக் ஹிந்தி தட்டெழுத்தில் நிமிஷத்திற்கு 75 வார்த்தைகள் வீதமும் பஞ்சாபியில் 80 வார்த்தைகள் வீதமும் அடிக்க வல்லவன். துருக்கியில் இஸ்தான்புலில் 1993ல் நடக்கப்போகும் இண்டர் ஸ்டெனோ போட்டியில் கலந்து கொண்டு புதிய சாதனை புரிந்து 'கின்னஸ்' புத்தகத்தில் இடம்பெற அபிஷேக் முயன்று கொண்டிருக்கிறான். அமெரிக்காவிலுள்ள ஒரு நிறுவனம் தான் நடத்தும் எலெக்ட்ரானிக் சாம்பியன் போட்டியில் கலந்து கொள்ள வரும்படி அபிஷேக்கிற்கு அழைப்பு விடுத்துள்ளது. அதனால் இப்போது அபிஷேக் எலெக்ட்ரானிக் டைப்ரைட்டரில் பயிற்சி அடைந்து கொண்டிருக்கிறான். இவனது இந்த முயற்சி வெற்றி அடைய வேண்டுமென வாழ்த்துகிறோம்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. 'ரோமாபுரி எரியும் போது நீரோ மன்னன் பிடில் வாசித்தான்' என்று கூறுவர். இந்த நீரோ மன்னனின் முழுப் பெயர் என்ன?
2. கி.மு. ஆறாவது நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு இந்திய விஞ்ஞானியை தற்கால 'ப்ளாஸ்டிக் அறுவை சிகிச்சையின் தந்தை' என்பர். அவர் யார்?
3. செடிகள் வளர்வதைக் கணக்கிடும் இயந்திரத்தைக் கண்டுபிடித்த இந்திய விஞ்ஞானி யார்?
4. மன்னன் பிறவிக் குருடன். தன் கணவன் அவ்வாறு இருந்ததால் ராணி தன் கண்களை மறைத்துத் துணியால் கட்டிக் கொண்டாள். அந்த மன்னனும் ராணியும் யாவர்?
5. எந்த நாட்டின் கொடி மிகப் பெரியது?
6. ஒலிம்பிக் கொடியில் பல வண்ணங்களில் ஐந்து வளையங்களைக் காண்கிறோம். அந்த வண்ணங்கள் யாவை? அவை ஏன் அப்படி அளிக்கப்பட்டன?
7. 1956ல் ரஷ்யத் தபால் தலை ஒன்றில் ஒரு இந்தியரின் படத்தை அச்சடித்தனர். அவர் யார்?
8. 1906ல் நோபல் பரிசு பெற்ற ஒருவரும் அவரது சீடர்களும் தொடர்ந்து எட்டு ஆண்டுகளுக்கு அப்பரிசை பெற்று வந்தனர். அச்சீடர்களின் குரு யார்?
9. அமெரிக்க அதிபராக மிகக் குறுகிய காலம் பதவி வகித்தவர் யார்?
10. 'சாக்கடலின்' ஆழம் எவ்வளவு?
11. 'ப்ளு கிராஸ் சொசைடி ஆப் இந்தியா'வை நிறுவியவர் யார்?
12. 'தீனபந்து', 'தேசபந்து' எனப் பெயர் பெற்றவர்கள் யாவர்?

## விடைகள்

1. கிளாடியன் சீஸர் ட்ருச்ஸ் ஜெர்மனிகஸ்.
2. சுஸ்ருதர்.
3. ஜகதீச சந்திரபோஸ்.
4. திருதராஷ்டிரன், காந்தாரி.
5. பிரேசில் தலைநகர் பிரசிலியாவில் பறக்கும் கொடி. நீளம் 328 அடி 1 அங்குலம், அகலம் 228 அடி 3 அங்குலம்.
6. நீலம், இலைப் பச்சை, மஞ்சள், பச்சை, சிவப்பு, கருப்பு. இந்த நிறங்களில் ஏதாவது ஒன்று எந்த நாட்டின் கொடியிலும் இருக்கும்.
7. காளிதாஸ்.
8. ஜே..ஜே. தாம்ஸன்.
9. வில்லியம் ஹென்றி ஹாரிசன். 1841ல் இவர் பதவி ஏற்கும்போது பெய்த மழையில் நனைந்து 32வது நாள் குளிர் காய்ச்சலில் இறந்தார். இவ்வளவுக்கும் இவர் ஒரு வைத்திய நிபுணர்.
10. 395.9 மீட்டர் ஆழம்.
11. கேப்டன் வி. சுந்தரம்.
12. சி.எப். ஆண்ட்ரூஸ், சித்தரஞ்சன் தாஸ்

# கொலம்பஸிற்கும் முன்பே!

கொலம்பஸ் கி. பி. 1492ல் அமெரிக்காவைக் கண்டு பிடித்தார். அதற்கு 500 ஆண்டுகளுக்கு முன் லீப் எரிக்சன் என்ற நார்வே நாட்டு மாலுமி கிரீன்லாண்டிலிருந்து வட அமெரிக்காவிற்குப் போய் இறங்கினார் என்று கூறுகிறார்கள். இந்த முதல் பயணத்தின் நினைவாக 9வது நூற்றாண்டின் வைகவுண்ட் கப்பல் போன்ற ஒரு கப்பலைக் கட்டி அதில் கடந்த மே மாதம் 3ந்தேதி நார்வேயிலிருந்து சிலர் கிளம்பினார்கள். அக்கப்பல் கி. பி. 1000ம் ஆண்டில் எரிக்சன் சென்ற வழியிலேயே போய் கொலம்பஸ் நாள் எனக் கொண்டாடப்படும் அக்டோபர் 12ந் தேதி அமெரிக்காவை அடையும்படித் திட்டமிட்டு விட்டார்கள்.




# அம்புலிமாமா செய்திகள்




## அஹிம்சை பல்கலைக் கழகம்

அமெரிக்காவிலுள்ள ஜைனர்கள் நியூஜெர்சியில் ப்ளேயர்ஸ் டௌனில் அஹிம்சைக் கொள்கையை போதிக்கும் பல்கலைக் கழகம் ஒன்றை நிறுவ முயன்று வருகிறார்கள். கோஸ்டாரீகாவிலுள்ள 'அமைதி பல்கலைக் கழக' அமைப்பில் இந்தப் பல்கலைக் கழகம் அமைக்கப்படும். இங்கு கலாசாரம், வரலாறு, மனோதத்துவம், பண்பாடு முதலிய விஷயங்கள் போதிக்கப்படும் என அறிவித்துள்ளார்கள். அஹிம்சையைப் போதிக்க முயற்சி நடப்பது போல வாஷிங்டன் பல்கலைக் கழகத்தில் கவியரசர் இரவீந்திரரின் இலக்கியம், எண்ணங்கள் முதலியவற்றையும் கற்பிக்க ஏற்பாடாகியுள்ளது.




# அனுபவம் வேண்டும்

சுப்பையாவின் தாய் அவன் சிறுவனாக இருக்கும்போதே இறந்துவிட்டாள். எனவே அவனை அவனது தந்தை தான் வளர்த்து வந்தான். சுப்பையாவும் நல்லவனாயும் தன் தந்தை கூறியபடியே நடந்தும் புத்திசாலி எனப்பெயர் பெற்றான். ஆனால் அவனுக்கு உலக அனுபவம் இல்லை. சுயமாக சிந்தித்து ஒரு வேலையும் அவனால் செய்ய ம்டியவில்லை. இதைக் கண்ட அவனது தந்தை அவனது எதிர்காலம் குறித்துப் பெரிதும் கவலை கொண்டான். இறக்குமுன் அவன் சுப்பையாவை அழைத்து "மகனே! நீ எந்த வேலையையும் செய்ய முடியும். உனக்குக் கெட்ட பழக்க வழக்கங்கள் எதுவும் கிடையாது. எல்லோரிடமும் நல்லவிதமாக நடந்து கொண்டாலே போதும். உனக்கு எந்தக் குறைவும் இராது" என்று கூறிக் கண்ணை மூடினான்.

சுப்பையா தன் தந்தை கூறியதை நன்கு மனத்தில் கொண்டான். அவ்வூர் கிருஷ்ண சாஸ்திரியை அந்நாட்டு மன்னர் கௌரவித்து சன்மானம் அளித்திருந்தார். சுப்பையா அவர் வீட்டிற்குப் போய் "ஐயா! தாங்கள் மிகுந்த அறிவாளி. அரசாங்கம் தங்களை கௌரவித்தது சரியே. உங்களுக்கு இப்படிப் பரிசு கிடைத்ததற்கு நான் மிகவும் மகிழ்கிறேன்" என்று கூறினான்.

ஆனால் கிருஷ்ண சாஸ்திரியோ கோபம் கொண்டு "பண்டிதர்களைப் பற்றி உனக்கு என்ன தெரியும்? நான் அரசாங்கப் பாராட்டிற்குத் தகுதி பெற்றவனா அல்லது இல்லையா என்பதைக் கூற உனக்கு என்ன யோக்கியதை உள்ளது? இனிமேல் உன்னை விட உயர்ந்தவர்களிடம் இப்படி ஒரு போதும்

-எஸ். கிருஷ்ணசாமி-



பேசாதே'' என்று கூறி அனுப்பி னார்.

சுப்பையா அதன்படியே நடக்க எண்ணி வந்து கொண்டி ருந்த போது வழியில் கிராம அதி காரியைக் கண்டான். அவனைச் சுற்றி நான்கைந்து பிரமுகர்கள் இருந்தார்கள். அவர்கள் எல்லோ ரும் முன்தினம் கிராம அதிகாரி அளித்த ஒரு தீர்ப்பைப் பாராட் டிக் கொண்டிருந்தார்கள். சுப் பையா அவர்களோடு சேர்ந்து நின்ற போதிலும் எதுவும் கூற வில்லை.

அதை கவனித்த கிராம அதி காரி "சுப்பையா! உன் வாயில் என்ன கொழுக்கட்டையா இருக் கிறது? எல்லோரையும் போல நீயும் நாலு வார்த்தை புகழ்ந்து சொல்லக் கூடாதா?'' என்று கோபித்துக் கொண்டான். சுப் பையா எதுவும் பேசத் தெரியா மல் அங்கிருந்து சென்றான். சிலர் தமக்குச் சமமானவர் புகழ்வதை விரும்பினார்கள். வேறு சிலரோ தம்மை எல்லோரும் புகழ வேண் டும் என்றே விரும்புவார்கள். இந்த இரண்டு அனுபவங்களும் சுப்பைய் யாவுக்கு ஏற்பட்டது.

சுப்பையா மறுநாள் தன் பக் கத்து வீட்டுப் பரமனிடம் "இந்தத் தடவை உன் வயலில் நல்ல விளைச் சல் கண்டிருக்கிறதே! நீ தொட்டுவ தெல்லாம் தங்கமாகி விடுகிறது. இதில் சந்தேகமே இல்லை'' என் றான். பரமனோ "என்னப்பா! ஒரேயடியாகப் புகழ்கிறாய்? என் னால் எதாவது வேலை ஆக வேண்டி இருக்கிறதா?'' என்று கேட்டான்.

சுப்பையாவும் "வேலை ஆக வேண்டும் என்றால் தான் ஒருவ ரைப் புகழ வேண்டுமா? உன்னி டம் ஒரு நல்ல விஷயம் கண்டால் அதைப் பாராட்டக் கூடாதா?'' என்று கேட்டான். அதற்கு பரமன் "நீ யாரையாவது புகழத்தான் வேண்டும் என்று நினைத்தால் இவ் வூர் கிராம அதிகாரியைக் கண்டு புகழ்ந்து பேசு. இந்த மாதிரிப் பலர் அவனைப் புகழ்ந்து தமக்கு வேண்டிய வேலைகளைச் செய்து

கொள்கிறார்கள்'' என்றான்.

இதைக் கேட்ட சுப்பைய்யா இனி யாரையுமே புகழக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டான். ஒருநாள் அவன் வயிற்று வலிக்கு மருந்து வாங்க வைத்தியர் விசுவம் வீட்டிற்குச் சென்றான். அப்போது வைத்தியர் கால் எலும்பு முறிந்த ஒருவனுக்குக் கட்டுப்போட்டுக் கொண்டிருந்தார். அவரிடம் சுப்பைய்யா "இவனது எலும்பு எப்படி முறிந்தது?'' என்று கேட்டான்.

வைத்தியரும் "ஒரு முரட்டுக் காளை இவனைத் துரத்தவே இவன் பயந்து விழுந்து காலை ஒடித்துக் கொண்டான். பாவம்'' என்றான். அதைக் கேட்டு விட்டு சுப்பைய்யா பேசாமல் இருந்தான். அப்போது வைத்தியர் "சுப்பைய்யா! அவனுக்கு அனுதாபம் காட்டி ஆறுதலாக இரண்டு வார்த்தை சொல்லக் கூடாதா?'' என்றார். அப்போது சுப்பைய்யாவின் மனதில் கஷ்டப்படுவோருக்கு ஆறுதல் கூறவேண்டும் என்பது பதிந்தது.

சில நாட்களுக்குப் பின் வேலன் என்பவனின் குடிசை எரிந்து போயிற்று. சுப்பைய்யா அவனைக் கண்டு ஆறுதல் கூறவே வேலனும் "இப்படி வெறும் வார்த்தைகளைக் கூறுவதால் என்ன பயன்? ஏதாவது பணஉதவி செய்தால் பிரயோஜனம் உண்டு'' என்றான். அப்போது சுப்பைய்யாவுக்கு கஷ்டப்படுபவருக்குப் பண உதவி செய்ய வேண்டும் என்பது தெரிந்தது.

இரண்டு நாட்கள் கழிந்தது. லட்சாதிபதி லட்சுமணன் வீட்டி





லிருந்து ஐம்பதாயிரம் ரூபாய் பெறுமான நகைகளும் பாத்திரங்களும் களவு போய்விட்டன. ஊரார் ஒவ்வொருவராகப் போய் லட்சுமணனுக்கு ஆறுதல் கூறினர். சுப்பையாவும் சென்றான்.

அவன் லட்சுமணனிடம் "உங்கள் பணம் போய் விட்டது ரொம்ப வருத்தமாக இருக்கிறது. இந்தக் கஷ்டநிலையில் உங்களுக்கு எல்லாரும் பண உதவி செய்ய வேண்டும். என்னிடம் பணம் இல்லாததால் நான் உங்களிடம் சம்பளம் பெறாமல் ஒரு வருடம் வேலை செய்கிறேன்" என்றான்.

அதைக் கேட்ட லட்சுமணன் "டேய்! ஐம்பாதாயிரம் போய் விட்டதால் நான் பிச்சைக்காரப் பயலாகி விட்டதாக நினைத்து விட்டாயா? உன்னிடம் உதவி பெறும் அளவிற்கு நான் தாழ்ந்து போய்விட்டதாக உன் நினைப்போ? இப்போது நான் உனக்குச் சமமாக ஆகிவிட்டேன் என்றா கொக்கரிக்கிறாய்? மரியாதையாகப் போய் விடு" என்று இரைந்தார்.

இதைக் கேட்ட சுப்பையாவின் தலையே சுழன்றது. தான் எப்படித்தான் பிறரிடம் நடந்து கொள்வது என்று யோசித்து யோசித்து அவன் குழம்பலானான்.

ஒரு நாள் சுப்பையா ஊருக்கு வெளியே ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்து கொண்டு ஏதோ யோசித்துக் கொண்டிருந்தான். அப்போது அவ்வழியே வந்த சன்னியாசி அவனைப் பார்த்து "மகனே நீ ஏன் கவலையில் மூழ்கி ஏதோ யோசித்துக் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார். சுப்பையாவும் தன் மன வேதனையை அவரிடம் கூறினான்.

அதைக் கேட்ட சன்னியாசி "நீ என்னவோ உன் நல்லதனத்தால் நற்பெயர் பெற ஆசைப்படுகிறாய். அதனால் தான் உன்னைப் பார்த்து எல்லோரும் கைதட்டிச் சிரிக்கிறார்கள்" என்றார். அப்போது சுப்பையா "சுவாமி! நான் நல்லதனமாகப் பேசி நடக்க முயல்வது தவறா?" என்று கேட்டான்.

சன்னியாசியும் "நீ அப்படி நினைப்பதில் தவறு எதுவும் இல்லை.

ஆனால் உலகம் உன் நல்லதனத்தை மெச்சாமல் உன்னிடமுள்ள குறையையே பெரிதுபடுத்துகிறது. இது தான் இந்த உலகின் விசித்திரப் போக்கு" என்றார். சுப்பைய்யாவும் "சுவாமி! என் தந்தை என்னை நல்லவிதமாய் நடந்து எல்லோர் மனமும் மகிழ நடந்து கொள்ளச் சொன்னாரே. அதன்படித்தானே நானும் நடக்க முயன்றேன். அப்படியானால் அவர் கூறியபடி நான் நடக்க வேண்டாமா?" என்று கேட்டான்.

சன்னியாசியும் "தாராளமாக அவர் கூறியபடியே நடக்க முடியும். அதற்காக நீ நல்லவன் என்று பெயர் பெற யாரைக் கண்டாலும் புகழ வேண்டும் என்பதில்லை. யாரிடமும் அனுதாபம் காட்ட வேண்டும் என்பதும் இல்லை" என்றார். "அப்படியானால் நான் என்னதான் செய்ய வேண்டும்?" என்று அவன் கேட்டான்.

"நீ நல்லவனாக இருக்க முயல்வது சரிதான். அதற்காக எல்லோரையும் புகழ்வதையோ அல்லது எல்லோரிடமும் அனுதாபம் காட்டுவதையோ ஒரு பழக்கமாகக் கொள்வது சரியல்ல. யாராவது உன் உதவியை நாடி வந்தால் அவர்களுக்கு உதவு. உன்னை ஏசுபவர்களை மன்னித்து விடு. காரணம் இல்லாமல் நீ யாரையும் திட்டாதே. உன்னைப் பற்றி யார் எது சொன்னாலும் அது பற்றிக் கவலைப் படாதே. நீயாகப் போய் வலிய உதவி செய்வதையோ அனுதாபப் படுவதையோ விட்டு இடம், பொருள், ஏவல் இவற்றை அறிந்து நீ பேசவோ செயல்படவோ வேண்டும். இதைத் தெரிந்து கொண்டாலே நீ வாழ்க்கையில் சுகப்படலாம்" என்றார்.

அன்று முதல் சுப்பைய்யா சன்னியாசி கூறியபடியே நடந்து வரலானான் அதனால் அவனை எல்லோரும் நல்லவன் என்று பாராட்டி வந்தார்கள்.





# புண்ணியம் யாருக்கு?

மன்னன் மகேந்திரன் தன் அமைச்சரோடு மாறுவேடம் பூண்டு மக்களின் குறைகளை நேரில் கண்டும் கேட்டும் அவற்றைப் போக்கி வந்தான். இவ்வாறு ஒருநாள் அவர் தலைநகரில் போய்க் கொண்டிருக்கையில் ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

பாதையில் இரு நண்பர்கள் போய்க் கொண்டிருக்கையில் ஒரு முடவனைக் கண்டார்கள். அப்போது ராமு என்பவன் தன் நண்பனிடம் "ஒரு காசு இருந்தால் கொடு. அந்த முடவனுக்குக் கொடுக்க விரும்புகிறேன். வீட்டிற்குப் போனதும் ஒரு காசை உனக்குத் திருப்பித் தருகிறேன். என்னிடம் சில்லரை எதுவும் இல்லை. அதனால்தான் உன்னிடம் கேட்கிறேன்" என்றான். அவன் நண்பன் கோபுவும் ஒரு காசை ராமுவிற்குக் கொடுக்க ராமு அதனை அந்த முடவனுக்குக் கொடுத்தான்.

அப்போது கோபு "நீ அந்தக் காசை தர்மம் செய்ததால் அதை நீ எனக்குத் திருப்பிக் கொடுக்க வேண்டாம்! நீ கொடுக்க முன் வந்தாலும் நான் அதை வாங்கிக் கொள்ள மாட்டேன்" என்றான்.

அதைக் கேட்ட மன்னன் மனதில் பல கேள்விகள் எழுந்தன. அந்த தானத்தில் பலன் யாரைச் சேரும்? ராமுவையா, கோபுவையா? அவன் அது பற்றியோசித்து யோசித்துப் பார்த்தும் அதற்கு விடை காண முடியவில்லை.

மறுநாள் அவன் தன்தர்பாரில் அந்த நிகழ்ச்சியைக் கூறி "அந்த இரு நண்பர்களில் யாருக்கு தர்மம் செய்ததின் புண்ணியம் கிடைக்கும்? ஒரு காசைக் கடன் கொடுத்த கோபுவுக்கா அல்லது கடனாக

-இராஜ. ரகுநாதன்-

வாங்கி தானம் செய்த ராமுவுக்கா?" என்று கேட்டான். ஒரு சிலர் தானம் செய்தவன் ராமு என்பதால் அவனுக்கே அப்புண்ணியம் சேரும் என்றனர். வேறு சிலர் காசு கொடுத்தவன் கோபு என்பதால் அந்தப் புண்ணியம் கோபுவிற்கே என்றனர். வேறு சிலரோ அந்தப் புண்ணியத்தில் பாதிபாதி இருவரையும் சேரும் என்றார்கள்.

அதைக் கேட்ட மன்னன் "நீங்கள் கூறியது எனக்குத் திருப்தி அளிப்பதாக இல்லை. நன்கு யோசித்து இதற்குத் தக்க விடையைக் கூறுங்கள். இன்னாருக்குத் தான் எனக்கூறினால் அதற்கான காரணம் என்ன என்பதையும் விளக்கமாகச் சொல்லியாக வேண்டும்" என்றான். யாராலும் மன்னனுக்குத் திருப்தி அளிக்கும் விதத்தில் பதிலைக் கூற முடியவில்லை.

அப்போது மன்னன் தன் அமைச்சர் ஆனந்தரைப் பார்த்து "நீங்களும் என்னுடன் இருந்து இந்த நிகழ்ச்சியைக் கண்டீர்கள் அல்லவா? உங்கள் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டான்.

அமைச்சரும் "அரசே! தர்மம் செய்யும் நிலையில் ஒருவன் பணம் வைத்திருந்தாலும் தர்மம் செய்யாமல் இருப்பவனைவிட பணம் இல்லாது போயிலும் தர்மம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் கொண்டவனே மேல். எனவே இந்த தர்மத்தின் புண்ணியம் ராமுவையே சேரும்" என்றார்.

அப்போது ஆஸ்தான விதூஷகன் எழுந்து "அரசே! அமைச்சர்



கூறுவதில் ஒரு பகுதிதான் சரி. இதில் புண்ணியம் ராமுவுக்குக் கிடைத்தாலும் ஒரு காசை வீணாக்கிய பாவம் கோபுவைச் சாரும் ஏனெனில் அவன் கடனாகக் கொடுத்த காசை ராமுவிடமிருந்து வாங்கிக் கொள்ள மறுத்துவிட்டான்'' என்றான். அது கேட்டு மன்னன் புன்னகை புரிந்தவாறே அமைச்சரைப் பார்த்தான்.

அமைச்சரும் "இதில் காசை வீணாக்கிய பிரச்னை இல்லை. ஏனெனில் ராமு காசைத் திருப்பிக் கொடுப்பதாகச் சொல்லி வாங்கினான். ஆனால் கோபுவோ தர்மம் செய்த காசை வாங்க மறுத்தான். அது தன் நண்பனுக்குக் கொடுத்ததாகும். இது வீணல்ல'' என்றார்.

அப்போது விகடகவி "சரி. அப்படியானல் புண்ணியம் உதவி செய்தவனுக்குக் கிட்டாதா?'' என்று கேட்டான். அமைச்சரும் "கிட்டாது. ஏனெனில் கோபுவுக்குத் தானம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் அவனிடம் காசு இருந்தும் ஏற்படவில்லை. அவன் தன் நண்பனுக்குக் கடனாக ஒரு காசைக் கொடுத்து அந்தக் கடனைத் தள்ளுபடி செய்தான். ராமுவுக்கு தானம் செய்ய வேண்டும் என்ற ஆசை எழுந்தது. அப்போது கையில் காசு இல்லாது போனாலும் நண்பனிடமிருந்து வாங்கி, அதைத் திருப்பிக் கொடுப்பதாகக் கூறிவிட்டே தானம் செய்தான். எனவே இந்த தானம் செய்ய ஒரு காசு செலவாகும் விதம் பற்றிய பொறுப்பு கோபுவினுடையதே. அவன் மனதில் முடவனுக்கு தர்மம் செய்ய வேண்டும் என்ற எண்ணம் எழவில்லை. ராமுவின் மனதில் தான் அது எழுந்தது. எனவே அந்த தர்மத்தின் பலன் ராமுவையே சேரும்'' என்றார்.

இந்த விளக்கத்தைக் கேட்ட மன்னன் திருப்தி அடைந்து அமைச்சரைப் பாராட்டிப் பரிசுகளையும் அளித்தான்.






அனுமார் தாம் சீதையைக் கண்டு வந்த விவரத்தை அங்கு கூடியுள்ள வானரர்களுக்கு கூறலானார்.

நான் மகேந்திரபர்வதத்தின் மீதிருந்து உயரக் கிளம்பிச் சென்றதை நீங்கள் எல்லோரும் பார்த்தீர்கள். நான் செல்லும் வழியில் ஒரு அழகான மலைச் சிகரம் கடலிலிருந்து உயர்ந்து வந்து என் வழியை மறித்தது. நான் அதனைத் தூள் தூளாக்க நினைத்தேன். ஆனால் அது என்னை மிகவும் அன்புடன் வரவேற்று என் தந்தை வாயு தேவன் அதனை இந்திரனிடமிருந்து காத்தவிதத்தைக் கூறியது. தனது பெயர் மைநாகம் என்றும் இராமரின் திருப்பணியில் ஈடுபட்ட எனக்கு உதவுவதாகக் கூறியது. நானும் என் பணியை விரைவில் செய்து வரவேண்டியிருப்பதால் அங்கு தங்குவதற்கு இல்லை எனக் கூறி விடை பெற்றுக் கொண்டு சென்றேன். அப்போது சரஸை என்ற பயங்கரக் கடல் வாழ் உயிரினம் என்னை விழுங்க முயன்றது. நான் மிகச் சிறிய உருவில் அதன் வாயில் புகுந்து அது தன் வாயை மூடுமுன் வெளியே வந்து விட்டேன். யாரும் அதுவரை அதன் வாயிலிருந்து தப்பியதில்லை. அதனால் அது என்னைப் பாராட்டி ஆசிகள் அளித்தது. பின்னர் நான் என் பயணத்தைத் தொடர்ந்த போது சிம்மிகை என்ற ராட்சஸி என் நிழலைப் பிடித்ததன் வாயிலாக என்னை தடுத்தாள். நான்

—மது வன அழிப்பு—



மிகச் சிறிய உருவில் அவள் வயிற்றில் புகுந்து அவளைக் கிழித்துக் கொன்றேன்.

இதன்பிறகு நான் லங்காபுரியை அடைந்தேன். அங்கு இலங்கையைக் காக்கும் இலங்கிணி என்ற அரக்கி என்னைத் தடுத்தாள். நான் அவளை வென்று நகருக்குள் சென்று சீதையைத் தேடலானேன்"

இவ்வாறு கூறிய அனுமார் மேலும் தொடர்ந்தார்: நான் பல இடங்களில் தேடி முடிவில் சீதாதேவியை அசோகவனத்தில் கண்டேன். அவரிடம்நான் இராமரின் தூதன் எனக் கூறி நான் அவரை அங்கிருந்து அழைத்துச் செல்வதாகக் கூறினேன். அவர் தம் கணவரே வந்து இராவணனைக் கொன்று தம்மை மீட்க வேண்டும் என்று கூறிவிட்டார். அந்த இராவணனைக் கொல்ல இராமர் வர வேண்டியதே இல்லை. நம்மாலே முடியும். சீதாதேவியையும் மீட்டு அழைத்துக் கொண்டு இராமரிடம் சேர்த்தும் விடலாம். நான் ஒருவனே இராவணனைக் கொல்லப் போதியவன். இந்திரஜித் போன்றவர்களைக் கொன்று விடலாம். ஆனால் சீதாதேவியின் விருப்பம் வேறு விதமாக இருப்பதால் நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை நீங்கள் முடிவு செய்யுங்கள்"

அங்கதனும் "ஆம்! அனுமார் கூறுவது சரியே. நாம் சீதாதேவியைப் பார்த்து வந்தோம் என்று சொல்வதை விட அழைத்துக் கொண்டே வந்துவிட்டோம் என்று கூறினால் இராமர் மிகவும் மகிழ்ச்சி அடையத் தானே செய்வார்" என்றான்.

ஜாம்பவானும் "எல்லாம் சரி தான். ஆனால் நமக்கு இட்ட கட்டளை என்ன? சீதாதேவி இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்து வரவேண்டும் என்பதுதானே அதை மீறி நம் இஷ்டபடி எல்லாம் செய்து விட முடியுமா?" என்று கேட்டான்.

அப்போது தான் மற்றவர்களுக்கும் தமக்கு இடப்பட்ட கட்டளை பற்றி நினைவு வந்ததோடு அனுமாரிடம் சீதை தான் வரமுடியாது என்றும் தன்னை இராமரே வந்து மீட்டுச் செல்ல வேண்டும் எனக்

கூறியதும் நினைவிற்கு வந்தது. அதனால் ஜாம்பவான் கேட்ட கேள் விக்கு அவர்கள் தாம் கட்டளைப் படித்தான் நடக்க வேண்டும் எனக் கூறினார்கள்.

அவர்கள் சீதையை அனுமார் கண்ட செய்தியை இராமருக்கு விரைவில் தெரிவிக்க அப்போதே கிளம்புவது எனத் தீர்மானித்துக் கிளம்பியும் விட்டார்கள். வழியில் அவர்கள் மிக அழகான பூந்தோட் டமாக விளங்கும் மதுவனத்தை அடைந்தார்கள்.

மது வனத்தைப் பாதுகாத்து நன்கு கவனித்துக் கொள்ள சுக்கிரீ வன் தன் தாய் மாமனான ததி முகனை நியமித்தான். மதுவனத்தை அடைந்ததும் அங்குள்ள காட்சி யைக் கண்டு மகிழ்ந்து போனார் கள். மரங்களில் பழங்கள் பழுத் துத் தொங்கின. அவற்றின் நிற மும் மணமும் வானரர்களின் நாக் கில் நீர் ஊற வைத்தது. சுற்றிலும் உள்ள செடிகளில் மலர்கள் நல்ல வாசனையைப் பரப்பின. இவற் றால் வானரர்கள் மனம் புல்லரித் தது. வானரர்கள் தாம் மது அருந்த அங்கதனின் அனுமதியைக் கேட் டார்கள். அவனும் அனுமதிக் கவே வானரர்கள் மதுவை அள வுக்கு மிஞ்சிக் குடித்து விட்டு ஆட் டம் போட்டார்கள். பாடினார்கள். தாவினார்கள். ஓடினார்கள். ஒரு வரையொருவர் அடித்துக் கொண்



டார்கள். தலைகால் தெரியாமல் துள்ளினார்கள். சிலர் குட்டிக்கர ணம் போட்டார்கள். சிலர் பல்லைக் காட்டி இளித்தார்கள். சிலர் ஒரு வர் தோளின் மீது மற்றவர் ஏறிக் கொண்டும் வேறுசிலர் ஒருவரை மற்றவர் சுமந்து கொண்டும் திரிந் தனர்.

வானரர்கள் அந்த வனத்தில் கிடைத்த மதுவை எல்லாம் அருந்தி விட்டு செடிகளைப் பிடுங்கிப் போட் டனர். மரக்கிளைகளை ஒடித்து எறிந்தனர். இதைக்கண்டத் ததி முகன் கோபம் கொண்டு வானரர் களெல்லாம் உடனே அந்த வனத்தி லிருந்து வெளியேறிவிட வேண் டும் என்று கூறினான். ஆனால் அவன் கூறியதை யாரும் சட்டை



செய்யவில்லை. அது மட்டுமல்ல அவன் மீது அவர்கள் விழுந்து கிள்ளி அடித்து உதைத்துக் கீழே தள்ளினார்கள்.

இதே சமயம் அனுமாரும் வானரர் களை உற்சாகப்படுத்த "நீங்கள் உங்கள் இஷ்டத்திற்கு மது அருந் துங்கள். உங்களை யாராவது ஏதா வது செய்ய முயன்றால் நான் பார்த் துக் கொள்கிறேன்" என்றார். அங்க தனும் "அனுமார் நமக்கு நல்ல தையே விரும்புபவர். அதனால் கவலை இல்லாமல் எல்லோரும் குடித்து மகிழுங்கள்" என்றான்.

அங்கதன் குடிமயக்கத்தில் கூறி யது வானரர்களுக்கு மேலும் உற்சா கத்தை அளித்தது. அவ்வளவுதான் வானரர்கள் மதுவனத்தைக் காவல் காப்பவர்கள் மீது பாய்ந்து அவர் களைத் துரத்தினார்கள். அதன் பிறகு மதுவனத்தையே பாழடித் தார்கள்.

ததிமுகன் தன் ஆட்களையெல் லாம் அழைத்துக் கொண்டு வானரர் களைத் தாக்கினான். ஆனால் அங் கதனோ அவனது தாக்குதலை முறி யடித்து அவனை விரட்டினான். வேறு வழி இல்லாமல் ததிமுகன் தன் ஆட்களோடு கிஷ்கிந்தாபுரிக்கு ஓடினான்.

அவன் சுக்கிரீவனின் கால்களில் விழுந்து கதறவே சுக்கிரீவனும் "என்ன விஷயம்? ஏன் இப்படி அலறிப் புடைத்துக் கொண்டு ஓடி வந்திருக்கிறாய்? உனக்கு வந்த ஆபத்து என்ன?" என்று கேட் டான்.

அவனும் "என்ன என்று நான் சொல்வேன்? இதுநாள் வரை நடந்திராத அதிர்ச்சியைத் தரும் சம்பவம் நிகழ்ந்திருக்கிறது. அங்க தனே இந்தச் சம்பவத்தில் ஈடுபட் டான். அவனோடு வந்த வானரர் கள் மது அருந்தி மதுவனத்தையே நாசப்படுத்தி விட்டார்கள். அவர் களை நான் அடக்கப் போக அங் கதனும் அவர்களோடு சேர்ந்து கொண்டு என்னை அடித்துத் துரத்தி விட்டான். எனக்கு என்ன செய்வது என்றே தோன்றவில்லை. அதனால் தான் இங்கு ஓடி வந் தேன்" என்றான்.



சீதையைக் கண்டிருக்க வேண்டும். இதில் சந்தேகமே இல்லை. ஒரு வேலையை அனுமாரும் அங்கதனும் ஜாம்பவானும் சேர்ந்து செய்வதாகப் பொறுப்பேற்றால் அவர்கள் அதைச் செய்து முடித்து விட்டுத்தான் மறு வேலை பார்ப்பார்கள். அதனால் நமக்கு நற்செய்தியே வரப்போகிறது'' என்றான்.

அதுகேட்டு இராமரும் லட்சுமணனும் மகிழ்ந்தனர். சுக்கிரீவனும் "மதுவனம் என் தந்தை விட்டு போன சொத்துதான். அதனைப் பாதுகாத்து நன்கு கவனித்துக் கொள்ள என் தாய்மானான இந்த ததிமுகனை நியமித்தேன். இதுநாள் வரை ஒரு புகாரும் இவன் செய்தது இல்லை. ஆனால் இன்றோ மிகவும் குழம்பிப் போய் ஓடி வந்திருக்கிறான். இதனால் சீதையைக் கண்டு பிடித்து விட்டு இந்த வானரர்கள் வந்திருக்கிறார்கள் என்றால் அவர்கள் மது அருந்தி அந்த வனத்தைப் பாழாக்கிய செயலை மன்னித்து விடுகிறேன். அவர்கள் இங்கு விரைவில் வரவேண்டும். அவர்களிடமிருந்து சீதையைக் கண்டு வந்த விவரத்தை நானும் இராமரும் இலட்சுமணரும் கேட்க ஆவலாக இருக்கிறோம்'' என்றான்.

ததிமுகனும் விரைவில் வானரர்களை அனுப்பி வைப்பதாகக் கூறி அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றான். அவன் மது

ததிமுகனுக்கு என்ன பிரச்னை என அறிய ஆவல் கொண்ட லட்சுமணன் "இவன் என்ன சொல்கிறான்?'' என்று கேட்டான். சுக்கிரீவனும் "நாம் சீதையைத் தேடிக் கண்டுபிடிக்கத் தென் திசையிலும் வானரர்களை அனுப்பினோமே. அவர்கள் திரும்பி வந்து இப்போது மதுவனத்தில் இருக்கிறார்கள். அவர்கள் அங்கு மது அருந்தி ஆடிப்பாடி குதித்து மதுவனத்தையே பாழாக்கிக் கொண்டிருக்கிறார்களாம். இதைக் கொண்டு அவர்கள் சீதை இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்து விட்டார்கள் என்று ஊகிக்க முடிகிறது. அப்படிக் கண்டு பிடித்திரா விட்டால் அவர்கள் திரும்பி வந்திருக்க மாட்டார்கள். அனுமார் தாம்

வனத்தை அடைந்து அங்கதனைக் கண்டு "அங்கதா! உன்னை உடனே சுக்கிரீவன் கிஷ்கிந்தைக்கு வரச் சொன்னான். நான் சுக்கிரீவனிடம் நீயும் மற்ற வானரர்களும் இந்த வனத்தை நாசப்படுத்தியதைக் கூறினேன். அவனோ நீ நற்செய்தி கொண்டு வந்திருக்கிறாய் என்று கூறி என்னைத் திருப்பி அனுப்பி விட்டான். இந்த மதுவனத்தில் உனக்கு இல்லாத உரிமையா எனக்கு? இதுவரை நடந்ததை எல்லாம் மறந்து விடுவோம். நீங்கள் இப்போதே கிளம்பிப் போய் சுக்கிரீவனைக் காணுங்கள்" என்றான்.

அங்கதனும் மற்ற வானரர்களிடம் "நாம் இப்போதே கிளம்பிச் செல்ல வேண்டும். இங்கு நீங்கள் போதிய மது அருந்தியாகிவிட்டது. இனிமேல் எச்சரிக்கையுடன் நடந்து கொண்டு சுக்கிரீவ மன்னனைக் காண வேண்டும். புறப்படுங்கள்" என்றான். வானரர்களும் "ஓ! இப்போதே கிளம்புகிறோம். உங்கள் வார்த்தை ஒன்றே எங்களுக்குக் கட்டளை இடுவது போலத்தான்" என்று கூறிக் கிளம்பி விட்டார்கள்.

சுக்கிரீவன் இராமரிடம் "அனுமார் சீதையைக் கண்டே வந்திருப்பார். இதில் சந்தேகமே இல்லை. குறித்த காலம் கடந்த பிறகும் அவரும் மற்ற வானரர்களும் திரும்பி வந்து விட்டார்கள் என்றால் அவர்



கள் தங்களது முயற்சியில் வெற்றி பெற்றே வந்திருக்கிறார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. எனவே உங்கள் கவலை தீர்ந்தது" என்று கூறினான்.

சற்று நேரத்திற்கெல்லாம் அவர்களுக்கு வானரப்படை செய்யும் ஆரவாரம் கேட்டது அதை அடுத்து சற்று நேரத்தில் வானரர்கள் எல்லாம் சுக்கிரீவன் முன் வந்து நின்றார்கள். 'கண்டேன் சீதையை' என்று கூறியவாறே அனுமார் இராமரின் கால்களில் விழுந்து வணங்கினார். இராமர் அவரைக் கனிவுடன் பார்க்கவே அவரும் "தேவியார் நலமாகவே இருக்கிறார்கள்" என்றார்.

இராமரும் "மிக்க மகிழ்ச்சி. அவளை எங்கே கண்டீர்கள்? எப்

படி இருக்கிறாள்? எனக்கு விவரமாகக் கூறு'' எனவே அனுமாரும் சீதை தன்னிடம் கொடுத்த சூடாமணியை எடுத்துக் கொடுத்தார். பிறகுதான் சீதையை எவ்வாறு கண்டுபிடித்தது என்பதை அவர் விவரித்துக் கூறலானார்.

''நான் நூறு யோசனை தூரமுள்ள கடலைக் கடந்து இலங்கையை அடைந்து இலங்காபுரியில் சீதாதேவியைத் தேடலானேன். பல இடங்களில் தேடி முடிவில் அசோக வனத்தில் அவரை ஒரு மரத்தடியில் கண்டேன். அவர் மிகவும் மெலிந்து போயிருந்தார். கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்தார். தன் உயிரையே மாய்த்துக் கொள்ளத் தயாராகிக் கொண்டிருந்தார். அவரைக் கண்டு நான் இராமனின் தூதன் எனக்கூறி நம்ப வைத்தேன். தாங்கள் கொடுத்த கணையாழியைக் கொடுத்தேன். அதைக் கண்டு தேவியார் மகிழ்ந்து போனார். அவர் தாம் பத்திரமாக வைத்திருந்த சூடாமணியை எடுத்துக் கொடுத்து தாங்கள் இன்னமும் ஒரு மாதத்துள் வந்து அவரை மீட்கா விட்டால் அவர் உயிர் அவரது உடலில் இராது எனவும் சொல்லச் சொன்னார். நாம் நம் படைகளுடன் இலங்கைக்குச் செல்ல என்ன வழி என்பதை யோசிக்க வேண்டும்.''

அனுமார் கொடுத்த கணையாழியை பார்த்து இராமர் கண்ணீர் உகுத்தார். சற்று நேரம் வரை எதுவும் பேசவில்லை. இலட்சுமணனாலும் எதுவும் கூறமுடியவில்லை. இராமரின் துக்கம் அவனையும் பாதித்தது. முடிவில் இராமர் சுக்கிரீவனிடம் சூடாமணியைக் கண்டதும்'' என்னால் எதுவும் பேச முடியவில்லை. இதனை ஜனக மன்னர் தம் மகளான சீதைக்கு அளித்தார். எங்கள் விவாகத்தின் போது சீதை இதனைத் தன் தலையில் அணிந்து கொண்டாள். இது எனக்கு சீதையையும் ஜனகரையும், என் தந்தை தசரதரையும் இப்போது எனக்கு நினைவுபடுத்துகிறது'' என்றார்.



# அவகாசம் வேண்டும்!

மங்களபுரி மன்னன் தன் தர்பாரில் பிரமுகர்களை ஒன்றுகூட்டி "உங்களுக்கு ஒரு பரீட்சை. நான் நெருப்பில் குதித்தேனானால் என்னுடன் நீங்களும் குதிக்கத் தயாரா? நான் சமுத்திரத்தில் குதித்தால் நீங்களும் என்னோடு குதிப்பீர்களா?" என்று கேட்டான்.

அவர்களில் யாரும் பதில் சொல்லவில்லை. ஆனால் ஆஸ்தான விதூஷகன் மட்டும் எழுந்து "அரசே! நான் தங்களோடு சேர்ந்து நெருப்பில் குதிக்கத் தயார். ஆனால் சமுத்திரத்தில் தங்களோடு குதிப்பதற்கு முன் எனக்குப் பதினைந்து நாட்கள் அவகாசம் தேவை" என்றான்.

அதைக்கேட்டு மன்னனும் மற்ற பிரமுகர்களும் ஆச்சரியப்பட்டார்கள். மன்னனும் "சமுத்திரத்தில் குதிக்க மட்டும் ஏன் பதினைந்து நாள் அவகாசம் கேட்கிறாய்?" என்று கேட்டான். விதூஷகனும் "அரசே! நெருப்பில் நீங்களும் நானும் குதிப்பதென்றால் அதிலிருந்து தப்ப நீங்கள் ஏதாவது ஏற்பாட்டைச் செய்து விடுவீர்கள். சமுத்திரத்தில் குதிப்பதானால் நீங்கள் நீந்திக் கரை சேர்ந்து விடுவீர்கள். ஆனால் எனக்கு நீந்தத் தெரியாது. உயிர் தப்ப நீச்சல் கற்றாக வேண்டும். அதற்குப் பதினைந்து நாட்கள் பிடிக்கும். நான் பிள்ளை குட்டிக்காரன். என் குடும்பம் வாழ வேண்டாமா?" என்று கூறினான்.

அதைக்கேட்டு மன்னனும் மற்றவர்களும் 'களுக்'கென்று சிரித்தார்கள். மன்னன் விதூஷகனின் அறிவைப் பாராட்டிப் பரிசுகளை அளித்தான்.






# நியாயமான பங்கு

கிழவி மீனாட்சி அம்மாள் வீட்டில் ராமு, சோமு என்ற இரு நண்பர்கள் பணம் கொடுத்து சாப்பிட்டு வந்தார்கள். ஒரு நாள் அவர்கள் வெளியூருக்குக் கிளம்பும் போது மீனாட்சி அம்மாள் ராமுவுக்கு ஒரு பொட்டலத்தையும் சோமுவுக்கு ஒரு பொட்டலத்தையும் கொடுத்து "இதில் தோசை இருக்கிறது. வழியில் சாப்பிடுங்கள்" என்றாள். அவர்களும் பொட்டலங்களை வாங்கிக் கொண்டு கிளம்பினார்கள்.

உச்சி வேளையின்போது அவர்கள் இருவரும் ஒரு மரத்தடியே உட்கார்ந்தார்கள். இருவரும் தம் பொட்டலங்களைப் பிரித்தனர். ராமுவின் பொட்டலத்தில் மூன்று தோசைகளும் சோமுவின் பொட்டலத்தில் இரண்டு தோசைகளும் இருந்தன. அதைக் கண்ட சோமு "இந்த மீனாட்சி அம்மாளுக்கு எப்போதுமே ஓர வஞ்சனைதான். நாம் இருவரும் சாப்பிடும்போது உனக்கு ஒரு கரண்டி நெய்யோ, தயிரோ அதிகமாகவே விடுவாள். என்னைப் பார்த்தால் ஏனோ அந்தக் கிழவிக்கு இளப்பம். இப்போது பார்! உனக்கு மூன்று தோசை. எனக்கு இரண்டே தோசை. இதற்குக் காரணம் நீ மாதமானதும் முதல் தேதியே அவளுக்குப் பணம் கொடுக்கிறாய். நான் தாமதமாக கொடுக்கிறேன்" என்றான் சலித்துக் கொண்டே.

ராமுவும் "க்வலைப்படாதே. நாம் இந்த ஐந்து தோசைகளையும் சமமாகப் பங்கிட்டுக் கொண்டு சாப்பிடலாம்" என்றான். அப்போது கோபு என்பவன் அங்கு வந்தான். அவன் அந்த இரு நண்பர்களிடமும் "எனக்கு மிகவும் பசியாக உள்ளது உங்கள் தோசைகளில்

—எஸ். சோபினி—

எனக்கு பங்கு கொடுக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

ராமுவும் "ஆகா! ஒவ்வொரு தோசையையும் மூன்று சமபாகங்களாக்கி மூவரும் சமமாகப் பங்கிட்டுக் கொண்டு சாப்பிடலாம்'' என்றான். அதன்படியே எல்லா தோசைகளையும் மூன்று சமபாகங்களாக்கி மூவரும் சாப்பிட்டார்கள்.

சாப்பிட்டு முடிந்ததும் கோபு தான் சாப்பிட்டதற்காகப் பணம் கொடுப்பதாக் கூறினான். ஆனால் ராமுவோ அதெல்லாம் ஒன்றும் வேண்டாம் என்றான். கோபுவோ அவன் கையில் ஒரு ரூபாயைத் திணித்து "அதெல்லாம் இல்லை இதை சாப்பாட்டின் விலையாக ஏற்காமல் என்னை உபசரித்ததற்காக என்று வைத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

அப்போது ராமு "கோபு நாம் கொடுத்த உணவிற்கு இந்த ஒரு ரூபாயைக் கொடுத்தான். என்னிடம் இருந்தது மூன்று தோசைகள். உன்னிடம் இருந்தது இரண்டு. அதனால் எனக்கு அறுபது பைசாக்கள். உனக்கு நாற்பது பைசாக்கள்'' என்று கூறி அவனிடம் நாற்பது பைசாக்களைக் கொடுத்தான்.

சோமுவோ "நீ இன்னமும் பத்து பைசா எனக்குக் கொடுக்க வேண்டும். நியாயமாக இதை நாம் சமமாகப் பங்கிட்டுக் கொள்வதே




சரி'' எனக்கூறி நாற்பது பைசாக்களை வாங்கிக் கொண்டான். ராமுவோ "அதெல்லாம் இல்லை. நான் சரியாகக் கணக்குப் போட்டே கொடுத்திருக்கிறேன். என் கணக்கு தான் சரி'' என்றான்.

சோமுவோ அவன் கணக்கை ஏற்காமல் "நாம் அதோ தெரியும் ஊருக்குள் போய் கிராம அதிகாரியிடம் நம் வழக்கைச் சொல்வோம். அவர் கூறும் தீர்ப்பை ஏற்போம்'' என்றான். ராமுவும் அதற்கு இணங்கினான். இருவரும் அந்த கிராமத்தை அடைந்தார்கள்.

கிராம அதிகாரியிடம் அவர்கள் தம் வழக்கைக் கூறி நியாயமான தீர்ப்பு கூறும்படிக் கேட்டார்கள். கிராம அதிகாரியும் எல்

லாவற்றையும் கேட்டுவிட்டு "சரியாக நியாயமான தீர்ப்புத்தானே கூற வேண்டும்? என் தீர்ப்பை இருவரும் ஏற்கிறீர்களா?" என்று கேட்டார். இருவரும் ஏற்கிறோம் என்றார்கள்

அப்போது அவர் "சோமு! நீ ராமுவுக்கு அவன் கொடுத்த நாற்பது பைசாவிலிருந்து இருபது பைசாவை அவனிடம் கொடுத்துவிடு. கணக்குப்படி உனக்குச் சேர வேண்டியது இருபது பைசாவே" என்றார். அதைக் கேட்ட சோமு ஆத்திரப்பட்டு "நான் ராமுவிடமிருந்து பத்து பைசா கிடைக்க வேண்டும் என்று கேட்டால் நீங்கள் என்னிடமிருந்து இருபது பைசாவை வாங்கி அவனுக்குக் கொடுப்பது நியாயமா?" என்று கேட்டான்.

கிராம அதிகாரியும் "உனக்கு கணக்கு என்ன என்று விவரமாகச் சொல்கிறேன். உன்னிடம் இரண்டு தோசைகளும் ராமுவிடம் மூன்று தோசைகளும் இருந்தன. அவற்றை மூன்று சமபாகங்கள் ஆக்கி மூவரும் சாப்பிட்டீர்கள். ஒவ்வொருவனும் சாப்பிட்டது ஐந்து துண்டுகள். நீ உன் இரு தோசைகள் ஆறு துண்டுகளானதில் ஐந்தை நீயே சாப்பிட்டுவிட்டு ஒரு துண்டைத்தான் கோபுவுக்குத் தந்தாய். ராமு தன் மூன்று தோசைகளை ஒன்பது துண்டுகளாக்கி ஐந்தைத்தான் சாப்பிட்டுவிட்டு மீது நான்கு துண்டுகளை கோபுவுக்குக் கொடுத்தான். கோபு தான் சாப்பிட்ட ஐந்து துண்டுகளுக்கு ஒரு ரூபாய் கொடுத்துவிட்டுப் போனான். எனவே ஒரு துண்டு இருபது பைசா என்றாகிறது. எனவே சோமு கொடுத்த ஒரு துண்டிற்கு இருபது பைசாவே கிடைக்கும். ராமு கொடுத்த நான்கு துண்டுகளுக்கு அவனுக்கு எண்பது பைசாக்கள்" என்றார்.

சோமு அந்தத் தீர்ப்பை ஏற்று இருபது பைசாக்களை ராமுவுக்குக் கொடுத்தான்.



# சகுன பலன்

பனையூரில் கிருஷ்ணன், கோவிந்தன் என்ற இரு நண்பர்கள் இருந்தார்கள். அவர்கள் ஐம்பது கிலோ மீட்டர் தொலைவிலுள்ள ஊரில் நடக்கும் சந்தைக்கு வீட்டை விட்டு கிளம்பினார்கள். அப்போது யாரோ ஒரு பால் குடத்துடன் அவர்கள் எதிரே வந்தார். அப்போது சகுனத்தில் நம்பிக்கை கொண்ட கிருஷ்ணன் "ஆகா! நல்ல சகுனம். பால்குடம் வருகிறதே" என்றான்.

கோவிந்தனோ சகுனத்தில் நம்பிக்கை இல்லாதவன். அதனால் "சகுனத்தில் எதுவும் இல்லை. எது நடக்க வேண்டுமோ அது நடந்தே தீரும்" என்றான். இருவரும் நடந்துபோய் வழியில் ஒரு ஊரை அடைந்தனர்.

அங்கு ஒரு பொதுக் கூட்டத்திற்கு ஏற்பாடாகி இருந்தது. ஒரு மகான் வந்து சொற்பொழிவு ஆற்றப்போவதாக தெரிய வரவே நண்பர்கள் இருவரும் கூட்டத்தில் சேர்ந்து கொண்டார்கள்.

அந்த மகானும் வந்தார். தம் சொற்பொழிவில் சகுனம், மூடநம்பிக்கை போன்றவற்றைக் கண்டித்துப் பேசினார். அவரது பேச்சை யாவரும் கரவொலி எழுப்பி ரசித்தார்கள். கோவிந்தனும் "கேட்டாயா! எவ்வளவு அருமையான பிரசங்கம்" என்றான்.

கிருஷ்ணனும் "நான் கிளம்பும்போதே சொன்னேனே நல்ல சகுனம் ஆகிறது என்று . அதனால்தான் இப்படி நல்லதொரு பிரசங்கத்தைக் கேட்டோம்" என்றான்.






# அவனே வைத்தியன்!

தருமன் என்ற இளைஞன் தான் மிகப் பெரிய வைத்தியராக வேண்டும் என்று ஆசை கொண்டான். எனவே வைத்திய சாஸ்திரத்தைக் கற்பிக்க குருகுலம் நடத்தி வந்த பரமானந்தர் என்பவரை அணுகினான். அவரும் அவனைத் தன் சீடனாக ஏற்று வைத்திய சாஸ்திரத்தை அவனுக்குக் கற்பிக்கலானார். மனித உடல் பற்றியும் மருந்துகள் பற்றியும் அவற்றைத் தயாரிக்கும் முறைகள் பற்றியும் அவனுக்கு விவரமாக விளக்கினார்.

தருமனும் அவற்றைச் சட்டென கிரகித்துக் கொண்டான். பத்து வருடங்களில் படிக்க வேண்டியதை நான்கே வருடங்களில் கற்றுக் கொண்டு விட்டான். ஒருநாள் பரமானந்தர் அவனை அழைத்து "தருமா! நீ என்னிடம் கற்க வேண்டியதை எல்லாம் கற்றாகி விட்டது. இனி நீ வைத்தியத் தொழில் புரியலாம். ஆனால் நீ அனுபவம் பெற யாராவது ஒரு வைத்தியனிடம் சிறிது காலம் உதவி வைத்தியனாகப் பணிபுரிய வேண்டும்" என்றார்.

தருமனும் அவ்வாறே செய்வதாக கூறி குருவிடம் விடைபெற்றுக் கொண்டு ஜெயபுரம் என்ற ஊரை அடைந்தான். அந்த ஊரில் நான்கு பிரபல வைத்தியர்களின் பெயர் கேட்டு அவர்களில் யாராவது ஒருவரிடம் உதவியாளனாக இருக்கத் தீர்மானித்தான்.

முதலில் மிகப் பிரபலமாக உள்ள வேதகிரி என்ற வைத்தியரின் வீட்டிற்குப் போனான். அங்கு நோயாளிகளின் கூட்டம் மிகப் பெரியதாக இருந்தது. வைத்தியரைக் கண்டு பேச அவனால் முடியவில்லை. இரண்டு மூன்று நாட்கள் முயன்றும் அவனால் அவரைக்

—பாபநாசம் சாமா—

கண்டு பேச முடியவில்லை.

அவன் மற்ற மூன்று வைத்தியர்களையும் சந்தித்துப் பேசிப் பார்த்தான். அவர்களுக்கு வைத்திய சாஸ்திரத்தில் போதிய அறிவு இல்லை என்பதைக் கண்டு கொண்டான். அவன் தனித் தனியாக அவர்களைச் சந்தித்து தான் வந்த வேலையைக் கூறித் தன்னை எப்படியாவது வேதகிரியிடம் உதவியாளனாகப் பணிபுரியச் சேர்த்து விடுமாறு வேண்டினான்.

அவர்களோ "அந்த வேதகிரியும் ஒரு வைத்தியனா? அவனுக்கு ஒரு மண்ணாங்கட்டியும் தெரியாது. ஏதோ அதிர்ஷ்டம் இருக்கிறது. எல்லோரும் அவனிடத்தில் போய் விழுகிறார்கள். நீ அவனிடம் போகாதே. என் உதவியாளனாக இரு" என்று சொல்லிப் பார்த்தார்கள். ஆனால் தான் வேதகிரியின் உதவியாளனாகவே இருக்க விரும்புவதாகக் கூறிச் சென்றான்.

அவன் வேதகிரியைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொண்டதில் அந்த மூன்று வைத்தியர்கள் கூறியதில் ஓரளவு உண்மை இருப்பதைத் தெரிந்து கொண்டான். வேதகிரி முறையாக வைத்திய சாஸ்திரம் கற்றவன் அல்ல என்பதையும் அவ்வப்போது வேறு பல வைத்தியர்களிடம் தன் நோயாளிகளைப் பற்றிக் கூறி அவர்களது ஆலோசனைகளைப் பெறுவதையும் தெரிந்து



கொண்டான். வேதகிரியை எப்படியாவது கண்டு தான் அவனைப் பற்றிக் கொண்டுள்ள அபிப்பிராயம் சரியா என்று சரிபார்த்துக் கொள்ளவும் அவன் விரும்பினான்.

ஒருநாள் அவன் ஒரு நோயாளி போல வேதகிரியைக் காணச் சென்றான். அவன் மிகக் கொடூரமான ஒரு நோயின் அடையாளங்களைக் கூறி அப்படிப்பட்ட நோய் தனக்கு வந்திருப்பதாயும் அதற்குச் சிகிச்சை அளிக்குமாறும் வேண்டினான். வேதகிரியும் அவனைப் பார்த்துவிட்டு "நீ நான்கு நாட்களுக்குப் பிறகு என்னை வந்து பார்" என்று சொல்லி அனுப்பினான்.

நான்கு நாட்களுக்குப் பின் தரு



மன் வேதகிரியைக் காணச் சென்றான். வேதகிரியும் "உன் நோயைப் போக்க மூன்றுவித வழிகள் உள்ளன. முதலாவது நீ நான் கூறும் காய்கறிகளையே பத்திய உணவாக ஒருவருட காலத்திற்கு உண்டு வருவது. இரண்டாவது வழி நான் கொடுக்கும் மருந்தை சேர்ந்தாற் போல நான்கு மாதங்கள் சாப்பிட்டு வரவேண்டும். அதற்கும் பத்தியம் இருக்க வேண்டும். மூன்றாவது வழியில் ஒரே வாரத்தில் இந்த நோயைப் போக்கி விடுவேன். முதலாவது வழியில் நீ சிகிச்சை பெற விரும்பினால் நீ எனக்கு ஆயிரம் வராகன்கள் கொடுக்க வேண்டும். இரண்டாவது வழியில் சிகிச்சை பெற விரும்பினால் மூவாயிரம் வராகன்கள் கொடுக்க வேண்டும். மூன்றாவது வழியில் சிகிச்சை பெற விரும்பினால் ஐயாயிரம் வராகன்கள் கொடுக்க வேண்டும். எந்த சிகிச்சையையும் ஆரம்பிக்கு முன் உன் உடல்நிலையை ஒருவார காலம் பரீட்சித்துப் பார்க்கவும் வேண்டும்" என்றான்.

தருமனுக்கு ஏற்பட்ட ஆச்சரியத்திற்கு அளவே இல்லை. அவன் வேதகிரியைப் பார்த்து "ஐயா! நீர் சாதாரணப்பட்டவர் அல்ல. இந்த நோயைப் போக்க இதுவரை இரண்டே வழிகள்தான் தெரிந்து இருந்தன. ஆனால் என் குரு பரமானந்தர் இரண்டு மாதங்களுக்கு முன்புதான் மூன்றாவது வழியைக் கண்டு பிடித்தார். அது இவ்வளவு விரைவில் தெரிய வந்தது ஆச்சரியமே" என்றான்.

வேதகிரி அதைக் கேட்டதும் "ஓ! நீ பரமானந்தரின் சீடன் தருமனா? நீ கூறிய நோய்க்கு சிகிச்சை என்ன என்று கேட்டு வர' என் ஆளை பரமானந்தரிடம் அனுப்பினேன். அதற்காகத்தான் உன்னை நான்கு நாட்கள் கழித்து வரச் சொன்னேன். அவர் உன்னைப் பற்றியும் அக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். உனக்கு எப்படி இந்த பயங்கர நோய் வந்தது? இதைத் தடுக்க உனக்கு வழி தெரிந்திருந்தும் நீ ஏன் என்னிடம் வந்தாய்?" என்று கேட்டான்.

தருமன் தனது நோக்கத்தைக் கூறி "நீங்கள் யாரிடம் வைத்திய சாஸ்திரம் கற்றீர்கள்? உங்களுக்கு இந்த ஊரில் இவ்வளவு பெயரும் புகழும் எப்படி ஏற்பட்டது? சிகிச் சைக்கு நீங்கள் ஏன் இப்படிப் பெரிய தொகை வாங்கி வருகிறீர் கள்?" என்று கேட்டான்.

அப்போது வேதகிரி "என்னைப் பற்றி உனக்குச் சொன்னால்தான் புரியும். சொல்கிறேன், கேள்" என்று கூறி தன்னைப் பற்றி சொல்ல லானான்.

"நான் வைத்திய சாஸ்திரம் படிக்கவில்லை. ஒரு வைத்தியரி டம் மருந்து அரைத்துக் கொடுக்கும் வேலை செய்து வந்தேன். அவர் நோயாளிகளைப் பரீட்சிக்கும் போதும் மருந்துகளைக் கொடுக்கும் போதும் உன்னிப்பாக கவனித்து வந்தேன். அவைபற்றி வைத்திய ரிடமும் அக்கறையுடனும் விசாரித் துத் தெரிந்து கொண்டேன். ஒரு நாள் திடீரென அந்த வைத்தியர் இறந்து விட்டார். அதனால் அவ ரிடம் வைத்தியச் சிகிச்சை செய்து கொள்ளும் நோயாளிகளுக்கு சிகிச்சை அளிக்கும் பொறுப்பு என் தலையில் விழுந்தது. என் கைராசி நல்லது என்றும் இறந்து போன வைத்தியரை விட நான் நன்கு வைத்தியம் பார்க்கிறேன் என்றும் பெயர் பெற்ற விட்டேன். ஆனால் வைத்திய சாஸ்திரத்தை படிக்கா



மல் நான் தொழில் நடத்த விரும்ப வில்லை. ஆனால் எங்கு போய்க் கற்பது? என் குடும்பத்தை எவ்வாறு போஷிப்பது என்ற பிரச்னைகள் எழவே நான் அந்த ஊரைவிட்டுக் கிளம்பி விஜயபுரத்திற்கு வந்து என் தொழிலை ஆரம்பித்தும் பல வைத்தியர்களின் யோசனைகளைக் கேட்டும் என் தொழிலை நடத்தி வந்தேன். அப்படி நான் யோசனை கேட்டவர்களில் நன்கு வைத்திய சாஸ்திரம் படித்த வைத்தியரும் ஒருவர் இருந்தார்."

அவர் என்னிடம் "வேதகிரி! எனக்கு வைத்தியத்தில் பல இரகசிய முறைகள் தெரியும். ஆனால் நான் அதிர்ஷ்டக்கட்டை. வருமானம் இல் லாது தவிக்கிறேன். உனக்கோ



கைராசி இருக்கிறது. நீ என் யோசனை களை கேட்டு நோயாளிகளுக்கு மருந்து கொடு. உனக்கு கிடைக்கும் வரும்படியில் ஒரு பங்கு எனக்குக் கொடு. அது போதும். நீ மாபெரும் வைத்தியன் என்று இவ்வூரில் எல்லோரிடமும் சொல்கிறேன்" என்றார்.

நானும் அதற்கு இணங்கி "அன்று முதல் அவரிடமும் மற்றும் பலரிடமும் யோசனைகள் கேட்டு நோயாளிகளுக்கு சிகிச்சை அளித்து வருகிறேன்."

வேதகிரி தன் கதையைக் கூறி "இவ்வாறு செய்வதால் குருகுலத்தில் படிக்க ஆகும் செலவை விட அதிக செலவு ஆகிறது. அதனால் தான் நோயாளிகளிடம் அதிகப் பணம் வாங்குகிறேன்" என்றான்.

தருமன் தான் வேதகிரியின் கீழ் வேலை செய்ய விரும்புவதாகக் கூறவே அவன் "ஐயோ! எனக்கு அனுபவ ஞானம் தான் உள்ளது. உன்னைப் போலப் படித்தவன் அல்ல" என்றான். தருமனோ பரவாயில்லை என்றான். எனவே வேதகிரி அவனைத் தன் கீழ் ஒரு வருடம் பணிபுரியச் சொன்னான். அன்று முதல் வேதகிரி நோயாளிகளைப் பார்க்கும்போது தருமனும் கூடவே இருக்கலானான். அதனால் நோயாளிகளிடம் வேதகிரி எப்படிப் பேசுகிறான் என்பதை உன்னிப்பாகக் கேட்டு வரலானான்.

ஒருநாள் ஒரு நோயாளி வேதகிரியிடம் "வைத்தியரே! நீங்கள் கொடுத்த மருந்து மிக நன்றாக வேலை செய்கிறது. தினமும் சாப்பிட்டதும் அந்த மருந்தை நீங்கள் சொன்ன அளவே சாப்பிடுகிறேன்" என்றான்.

அப்போது தருமன் "அடடா! இந்த மருந்து சாப்பாட்டிற்கு அரை மணி நேரம் முன்போ அல்லது அரை மணி நேரம் பின்போ அல்லவா சாப்பிட வேண்டும்!..." என்று கூறிக் கொண்டிருக்கும்போதே வேதகிரி குறுக்கிட்டு நோயாளி "இவர் இப்போதுதான் என்னிடம் வைத்தியம் கற்றுக் கொள்ள ஆரம்பித்திருக்கிறார். நீ இன்னமும் இரண்டு நாட்களுக்குத் தொடர்ந்து

இதே மருந்தை இப்படியே சாப்பிட்டு வா. பிறகு பார்க்கலாம்'' என்று கூறி அனுப்பினான்.

இரண்டு நாட்கள் கழித்து அந்த நோயாளி வந்ததும் வேதகிரி அவன் நாடியைப் பிடித்து பார்த்துவிட்டு "இன்று உனக்கு வேறு மருந்து தருகிறேன். இதனை நீ சாப்பாட்டிற்கு அரைமணி நேரம் முன்பாகவோ அல்லது அரைமணி நேரம் கழித்தோ சாப்பிட வேண்டும்'' என்று கூறி மருந்தைக் கொடுத்து அனுப்பினான்.

நோயாளி போன பின் தருமன் "நீங்கள் இந்த நோயாளிக்கு முன்பு கொடுத்த மருந்தைத்தானே கொடுத்தீர்கள். வைத்தியர் இப்படி மோசடி வேலையில் இறங்குவது பெரும் தவறு'' என்றான்.

அதுகேட்டு வேதகிரி புன்னகை புரிந்தவாறே "தருமா! அந்த நோயாளி நான் அவனது நோயை குணப்படுத்தி விடுவேன் என்ற நம்பிக்கையில்தான் என்னிடம் வருகிறான். அந்த நம்பிக்கை வீண் போகாமலும் அது குறையாமலும் நான் பார்த்துக் கொள்ள வேண்டும். அவனுக்கு நாம் என்ன மருந்து கொடுக்கிறோம் என்பதை அவன் தெரிந்து கொள்ள வேண்டியதில்லை. நாம் கொடுக்கும் மருந்தால் தான் குணமடைந்து வருவதாக அவன் நம்பினாலே அவனது நோயில் பாதி மறைந்தது போலாகிவிடும். நாம் வைத்தியர்கள். எப்படியாவது நோயாளியை குணப்படுத்த வேண்டியது நம் கடமை'' என்றான்.

தருமன் வேதகிரியை வணங்கி "ஒரு வைத்தியனுக்கும், வைத்திய சாஸ்திரம் படித்த ஒருவனுக்கும் உள்ள வித்தியாசம் என்ன என்று எனக்கு உணர்த்தி விட்டீர்கள். உங்கள் வழியைப் பின்பற்றுகிறேன்'' எனக் கூறி அவனை வணங்கி விடை பெற்றுக் கொண்டு வேறு ஒரு ஊருக்குப் போய் வைத்தியத் தொழிலை நடத்தலானான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1992 ஜனவரி மாத இதழில் வெளியிடப்படும்**


M. Natarajan


M. Natarajan

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ நவம்பர் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

## செப்டம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **ஆடி அமர வீடு இல்லையே!**

இரண்டாவது போட்டோ : **பாடிப் பறக்க சிறகு இல்லையே!**

பரிசு பெற்றவர் : **எல். அபர்ணா, பம்பாய்-37**

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

# பெற்றோரின் அக்கறை




பாருங்க,
அப்பா...


அந்த கொக்குகள் எருமையைத் தாக்குது.
கொக்குகளின் கூட்டுக்கு பக்கத்திலெ எருமை போயிருக்கும்...


பாரு... கூட்டிலே குஞ்சு பொரிஞ்சு வெளிவந்திருக்கு...


ஆனா, எருமை புல்லைத்தானே தின்னும். அது போய் கூட்டை கலைக்குமா?
அது சரி, தீபா. ஆனால் பெற்றோருக்கு...
கவலை இருக்கத்தானே இருக்கும்!
AMRITA BHARATI


அந்த அப்பா கொக்கை விட நான் ஒரு படி மேல்...
அம்மா!


என்கிட்டே ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாலிசி இருக்கு. எனக்கு ஏதாவது ஆனாலும் என் குடும்பத்துக்கு பாதுகாப்பு உண்டு!

# JUNIOR QUEST



## NOW with the added fun of SPUTNIK Junior!




Selections from Sputnik Junior!.

* Colourfully illustrated stories and cartoons.
* Superb science fiction
* Entertainment and general knowledge

64 packed pages!
At just Rs. 6/-

Sputnik Junior

To subscribe write to,
JUNIOR QUEST,
Dolton Agencies,
Chandamama Buildings,
N.S.K. Salai, Vadapalani,
Madras: 600 026.

A Chandamama Vijaya Combines publication



